SAPTHAGIRI


ஏப்ரல், 1996

# ஸப்தகிரி

விலை ரூ. 4/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

P.N.G. Datti



*நின்றவன் கீர்த்தியும் நீள்புனலும் நிறைவேங்கடற்பொற்*
*குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும்*
*உன்றனக் கெத்தனை யின்பதந்தரு முன்னிணை*
*மலர்த்தாள்*
*என்றனக்குமது இராமானுசா இவை யீந்தருளே!*
*(இராமானுஜர் நூற்றந்தாதி - 76)*

"எம்பெருமானாரே, நிலைநின்ற பெரும் புகழும், அதிகமான நீர்ப் பெருக்கும் நிறைந்துள்ள திருவேங்கடமென்னும் அழகிய திருமலையும் ஸ்ரீவைகுண்டமாகிய திருநாடும், கொண்டாடத்தக்க திருப்பாற்கடலும், தேவரிருக்கு எவ்வளவு ஆனந்தத்தை விளைவிக்குமோ, தேவரீருடைய உபய பாதாரவிந்தங்கள் எனக்கும் அவ்வளவு ஆனந்தத்தை விளைவிக்கும். இப்படிப்பட்ட திருவடிகளை அடியேனுக்குத்தந்தருள வேண்டும்."

************

# ஸப்தகிரி

ஏப்ரல் - 1996

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-
மலர் 26 இதழ் 11

சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : வேங்கடவன் புகழ்பாடும் அன்னமய்யா -சித்திரம் : தத்து.

முதல் உள்ளட்டை : திருமலையில் ஸ்ரீராமநவமி திருநாள்.

2-வது உள்ளட்டை : ஸ்ரீவசந்தோத்ஸவம் - திருமலை.

பின்னட்டை : ஸ்ரீகுண்டலீஸ்வர சுவாமி திருக்கோயில் ஆ.பி.

JAGADISH

# உங்களுடன்.....

மனிதன் இம்மண்ணில் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தான் என்ப தைவிட இம்மண்ணிற்கு (சமுதாயத்திற்கு) எத்துணை துணை செய்தான் என்பதுதான் முக்யமானதாகும். "கின்னஸ் புத்தகத்"தில் இடம் பெறு வதைவிட, மனிதனாக வாழ்ந்து என்ன முடித்திட்டான் என்பதுதான் அதைவிட அவசியமானதாகும். அன்றைய சங்கரரும், இன்றைய பாரதியும் வாழ்ந்த ஆண்டுகள் சிறிதேயாயினும், அவர்கள் வாழ்ந்து சென்ற பாதை, விட்டுச் சென்ற செய்திகள் மனிதநேயமே மாண்புறச் செய்திடும் வகையில் திகழ்ந்தன. அப்போது அதிக ஆண்டுகள் வாழ்பவர்களால் பயனில்லையோ எனும் கேள்வி எழுவது இயற்கையே. ஏன் இல்லை?! ஒரு நூறாண்டு காலம் வாழ்ந்த பின்னரும், அவர்கள் இன்னும் ஒரு நூறாண்டு வாழவில்லையே எனும் ஏக்கம் நம்முள் எழுந்திடும் வகையில் வாழ்ந்தவர் பலர் இம்மண்ணில் இருந்து போயுள்ளனர். விமானம் கண்டுபிடித்தபின்னர் மிதிவண்டியை கண்டுபிடித்தவரின் பெயரை, மக்கள் மறக்கலாம் அல்லது அவர்தம் பெயர் மறையலாம். ஆனால் மனித இனம் உய்ய, நல்வழி காட்டிட, சிந்திக்கத் தெரிந்த மனிதரை மேலும் சிரிய சிந்தனையாளராக உயர்த்திட நூறாண்டு காலம் வாழ்ந்தோர் பிள்ளை லோகாசாரியர், வேதாந்த தேசிகர், எம்பார், திருவரங்கத்தமுதனார் என்று வைணவப்பெருந்தகையாளர்களின் பட்டியல் நீளும். அவர்களுள் தன் வாழ்நாளை சமயத்திற்காகவே கழித்திட்ட, 'உடை யார்','எம்பெருமானார்' 'இளையாழ்வார்' 'யதிராஜர்' என்று பல பெயர் பூண்டு சுமார் 120 ஆண்டுகள் நாம் வாழும் இம்மண்ணில் நடமாடி, நம்மாழ்வாரின் ஏற்றத்தை பார் அறியும் வகையில், ஆதிசேஷன் அம்சமாக, 'பவிஷ்யத் ஆசார்யராக' தோன்றி இந்து சமயம் தழைத்திட, குறிப்பாக வைணவம் தனித்தன்மை பெற்று விளங்கிட வழிவகுத்தவரான 'ஸ்ரீராமாநுஜர்' ஒரு சமய மறுமலர்ச்சியாளராகவே அன்றும் இன்றும் விளங்குகின்றார்.

தன்பிறப்பின் முன்பேயே தன் உருவமேனியை நம்மாழ்வாரால் இத் தென்னாடு கொண்டு திகழ்ந்திடும் வகையில் பெருமைபெற்ற இராமாநுஜர் இந்து சமய உலகில் ஒரு புதிய தத்துவ மறுமலர்ச்சியினை, சமுதாயத் தில் ஒரு புதிய சீர்த்திருத்தப்புரட்சியினை ஏற்படுத்தினார். தன் குருவும், அத்வைதியுமான யாதவப் பிரகாசரிடம் வேதத்திற்கும், உபநிடதங்களுக்கும் ஒரு சார்பான விளக்கங்கள் கேட்டு மனம் நொந்து, பிறகு தன்னுடைய புது விளக்கங்களால் 'விசிஷ்டாத்துவைதம்' எனும் ஒரு புதிய வைணவக் கோட்பாட்டினை உருவாக்கினார். ஆழ்வார்தம் பாசுரங்களுக்கு, குறிப்பாக நம்மாழ்வார் அருளிச்செயல்களுக்கு, சாமான்யர் அறிந்திடும் வகையில் எளி மையையும், புதுப்பொலிவினையும் தந்தருளினார். சங்கரரின் அத்வைதக் கொள்கைக்கு மாறாக, அதே நேரத்து 'நிர்க்குண' மார்க்கத்தைவிட 'சகுண' மார்க்கத்தின் பெருமை பேசிடும் வகையில், 'ஞான' நிலையினர்க்கு உரியதாக

இருந்த சமயத்தை - கடவுள் உண்மையை சாமான்யர்க்கு அறிமுகப்படுத்திடும் வகையில் 'ஸ்ரீவைஷ்ணவ' தரிசன சிறப்பினை அத்வைதிகளுக்கும், அதன்பால் பெருமளவில் ஈடுபாடு கொண்டிருந்த சமயச் சான்றோர்களுக்கும், செல்வந்தர்களுக்கும் அறிமுகப்படுத்திடும்முகத்தான் விசிஷ்டாத்துவைதத்தின் பெருமை பேசிடும் நூல்களை வடமொழியிலேயே இயற்றி அவர்களை முதலில் நல்வழிப்படுத்தவே முனைந்தார். மேலும் தான் தந்திட்ட வைணவத் தத்துவ விளக்கங்களை மக்களிடையே நேரிடையாக பரப்பிடவே, ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை நாடெங்கிலும் நிலைநாட்டிடவே, சைவ, ஜைன, புத்த, சமய ஆதிக்கங்களிடையே எதிர்நீச்சல் போட வேண்டி ஒரு கட்டாயச் சூழலில் இளையாழ்வார் இருந்தமையால்தான் என்னையோ, தமிழில் அவர்தம் சமய விளக்கக்கோட்பாடுகள் இல்லைபோலும். இதுவே அவர்தம் தன்னலமற்ற சமயத்தொண்டு, தமிழில் ஸ்ரீவைஷ்ண சம்ப்பிரதாய நூல்கள் மீது வைத்திருந்த மேலான மதிப்பு ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டின.

ஆனால் அவர்தம் இம்முயற்சியே 'இராமானுஜர் சித்தாந்தம்' எனும் ஸ்ரீவைஷ்ணவ சமயம் இம்மண்மில் நன்ருக வேரூன்றிட வழிவகுத்தது. தான் ஒரு சமயவாதி மட்டுமின்றி ஒரு தலைசிறந்த நிருவாகியும்கூட என்பதற்கு எடுத்துக்காட்டாக அவரால் மேற்கொள்ளப்பட்ட, ஸ்ரீரங்கம் மற்றும் திருமலைக்கோயில் நிருவாக சீரமைப்புகளும், வைணவம் நாடெங்கிலும் தழைத்தோங்கிட 74 சிம்மாஸனாதிபதிகளையும், 700 ஜீயர்களையும், 12,000 பாகவதர்களையும் கொண்ட பல்வேறு நிலைகளில் இயங்கிடும் அமைப்புகளும் அமைந்திட்டன. எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போன்று ஸ்ரீவைஷ்ணவத்தை இனம், இடம், மொழி கடந்து பரவிடும் வகையில் திருமந்திர பொருள் ரகசியச் சிறப்பினை திருக்கோட்டியூர் திருக்கோயில் கோபுரம் ஏறி ஊர்மக்களுக்கு உணர்த்தியும், தீண்டாதவர்களாகக் கருதப்பட்டோருடன் தோளோடு தோள் சேர்ந்து ஆலயப்பிரவேசம் மேற்கொண்டும், விலக்கப்பட்ட ஜாதியினரைத் தன் சீடர்களாக ஏற்றும், திருமண் காப்பைத் திருமலாடியார் யாவரும் இட்டுக்கொள்ள வழிவகுத்தும் தாம் ஒரு 'சிந்தனை புரட்சியாளர்' என்று பல ஆண்டுகளுக்கு முன்பேயே உணர்த்திட்ட அன்னாரை ஓர் உண்மையான பகுத்தறிவாளர் என்றே அழைத்திடல் வேண்டும்.

செயற்கரிய அவர்தம் திருத்தொண்டிற்காகவே இம்மண் தன்னகத்தே 120 ஆண்டுகள் அவரைக் கொண்டிருந்தது என்றே கூறவேண்டும். ஓர் உண்மையான சமய வாதியாகவும், தீவிரமான சீர்த்திருத்தவாதியாகவும், தேர்ந்த நிருவாகியாகவும், தலைசிறந்த தொண்டனாகவும், எல்லாவற்றிற்கும் மேலாக வைணவ சமயத்தின் இலக்கணமாகவும் வாழ்ந்து மனித நேயம் சிறந்தோங்கிட ஒரு நல்ல சமய நெறியை உருவாக்கிய ஸ்ரீஇராமானுஜரின் வழிநின்று, அவர் சொல்ல காத்து, நம்மை நாம் பண்படுத்திக்கொள்வோமாக!



# இராமானுஜரின் மனிதநேயம்

திரு. வரதாச்சாரி நரஸிம்ஹன் - சென்னை.

கலியுகத்தில் மக்கள் - அல்ப சுகங்களான இந்திரிய சுகங்களை அடக்கி, பேரின்ப வாழ்வுக்கான வழியை எய்திட ஆழ்வார்கள், மற்றும் ஆச்சார்ய புருஷர்கள் தோன்றி பக்தி மூலம் பிரபத்தியை உபதேசித்தனர். இவர்கள மக்களுக்கு நேரிடையாக உபதேசித்தனர் என்று கூறுவதைவிட, தாங்கள் பெற்ற ஞானத்தை எழுதி மற்றும் பாடி வைத்தனர் என்றே கூறலாம். இந்த வரிசையில் இராமானுஜர் சற்றே மாறுபட்டிருந்தார். வேதக் கருத்துக்களையும், நாலாயிர திவ்யப் பிரபந்த கருத்துக்களையும் இந்தியநாடு முழுவதும் பயணம் செய்து, எல்லா வகை மக்களுக்கும் எளிதில் புரியும் வகையில் எடுத்துரைத்தார்.

"உணர்ந்த மெய்ஞ் ஞானியர்
யோகந்தோறும் திருவாய்மொழியின்
மணந்தரும் இன்னிசை மன்னுமிடந்-
தோறும் மாமலராள்
புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும்
பதிதோறும் புக்கு நிற்கும்
குணந்திகழ் கொண்டல் இராமாநுச
னெங்குலக் கொழுந்தே"
-(இராமாநுஜ நூற்றந்தாதி)

மனிதவுயிர்களில் எந்தவித பாகுபாடும் அவர் காணவில்லை. எல்லா உயிர்களும் பரமனை அடிபணிந்து, அவனுடன் இரண்டற கலத்தலையே அவர், யாவர்க்கும் எடுத்துரைத்தார். ஆகையால் மாமுனி இராமானுஜரிடம் 'மனித நேயம்' அதிகமாக இருந்தது.

'அனுஜன்' என்றால தம்பி என்று பொருள். இராமானுஜன் என்றால் இராமனுக்கு தம்பியான லக்ஷ்மணனைக் குறிக்கும். இராமானுஜருடைய ஜாதகம லக்ஷ்மணனுடைய ஜாதகத்தை ஒத்திருந்ததால், பெற்றோர்களால இவருக்கு இந்த நாமகரணம் சூட்டப்பட்டது. பதினொன்றும் நூற்றாண்டின் முற்பகுதியில, சென்னையிலிருந்து சுமார் 45 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள 'ஸ்ரீபெரும்புதூர்' எனனுமிடத்தில் இராமானுஜர் அவதரித்தார. இவருடைய பெற்றோர்கள் ஆசூரி பூதபுரி சோமையாஜி மற்றும் காந்திமதி அம்மாள் ஆவர். இராமானுஜருக்கு எதிராஜர, எம்பெருமானார், ஸ்ரீபாஷ்யக்காரர், உடையவர் என்னும் பட்டப்பெயர்களும் உண்டு. நம்மாழ்வார் பூர்வத்தில் சொல்லிய, "கலௌ கஸ்சித் பவீஷ்யதி" என்ற சொல்லும் ஸ்ரீபெரும்பூதூரில், 'ஆதிசேஷாவதாரம்' நிகழப்போகிறது என்ற வாக்கும் பலித்ததாக யாவரும் கூறுவர்.

இராமானுஜர், தன் பால பருவத்தில தந்தையிடமே கல்வி கற்றார். இவருககு 'விட்ட குறை தொட்டதுமே' என்பது போல், ஒரு தடவை படித்தாலே யாவும் மனதில் பதிந்தன. இதனால், இவர் ஞானத் தேர்ச்சிப் பெற்று விளங்கினார். இவரிடம் அதிமானுட சக்தியும், அறிவுக் கூர்மையும், ஹரி பக்தியும் சிறு வயதுமுதலே இருந்தன.

ஸ்ரீபெரும்பூதூரையடுத்த பூவிருத்தவல்லி என்னும் ஊரில், 'ஸ்ரீகாஞ்சி பூரணர' என்றழைக்கப்பட்ட 'திருக்கச்சி நம்பிகள்' வசித்து வந்தார். இவர் காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீதேவாதிராஜப்பெருமாளுக்கு ஆலவட்ட கைங்கர்யம் செய்வதற்காகத் தினமும் அம்மாநகருக்குச் சென்று வருவது வழக்கம். இவர், காஞ்சிமாநகர் செல்லும்பொழுது, இராமானுஜரின வீட்டுவாசல் வழியாகச் செல்வது வழக்கம். திருக்கச்சி நம்பிகள் ஒரு சிறந்த ஹரி பக்தர். மற்றும் பகவத் பக்த தீர்க்கத்தரிசி.

இராமானுஜர், ஒருநாள் திருக்கச்சி நம்பிகளை நேருககு நேர் சந்திக்க நேர்ந்தது. திருக்கச்சி நம்பிகளைப் பற்றி முழுவதும் அறிந்த இராமானுஜர் தன் வீட்டிற்கழைத்து அவருக்கு அமுது படைத்தார். அதன் பிறகு திருக்கச்சி நம்பிகளின் ஆசியை வேண்டி, இராமானுஜர் அவர் பாதங்களில் விழுந்து வணங்க முயன்றார். உடனே திருக்கச்சி நம்பிகள், இராமானுஜரை தடுத்து நிறுத்தி, பின்வருமாறு கூறினார்: "நீரோ உத்தம பிராமணரும், பரம ஸ்ரீவைஷ்ணவரும் ஆவீர். நானோ மூன்றுவது வருணத்தவன். நீர் எனக்கு இவ்வாறு பணியாற்ற நினைப்பது தக்கதன்று". இதனை செவியுற்ற இராமானுஜர மனம் வருந்தி, பின்வருமாறு கூறலானார்: "ஒருவன் பிறப்பால் உயர் குலத்தை அடைந்துவிட முடி

யாது. தாழ்ந்த குலத்தினில் பிறந்தவனாயினும் பகவானிடத்தில் பக்தியும், அவர் பக்தர்களிடம் பணிவும் கொண்டவன், என்றுமே உயர் குலத்தினன்".

மிகவும் தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும், பரமாத்மாவான ஹரியின் மீது பக்தி வைத்து பரமகதியடைந்தார் திருப்பாணாழ்வார். அவர் மோட்சகதியடைவதற்கு முன்பு, ஒரு பிராமணரன்றோ அவரை அரங்கத்தம்மான் தரிசனத்திற்காக, தன் தோள்மீது கோயிலுக்குள் தூக்கிச் சென்றார். அதுவும், அரங்கத்தம்மான் கட்டளையாலன்றோ!

இதன்மூலம் ஜாதிவெறி மலிந்திருந்த காலத்தில் தோன்றிய இராமானுஜர், சிறுவயது முதலே அதனை வன்மையாக எதிர்த்தார் என்பது புலப்படுகின்றது.

இராமானுஜர் ஸ்ரீரங்கம், ரங்கநாதர் கோயில் திருப்பணித் தொண்டுக்குப் பொறுப்பேற்று, அங்கேயே தங்கி இருந்தார். தினமும் [illegible]காலை காவிரி நதியில் நீ[illegible] திரும்பும்பொழுது அவரு[illegible]ர்களான கூரேசன், மு[illegible]டான் கைகள் மீது [illegible]ணியிட்டு பிடித்துக்கொண்டு வருவார். ஒரு நாள் அவ்வாறு, நீராடித்திரும்பும்பொழுது, அவருடைய சீடரான வேடுவ மறக்குலத்தைச் சேர்ந்த, 'உறங்காவில்லிதாசர்' அவரை அடிபணிந்து எழுந்து நின்றார். உடனே இராமானுஜர் அவருடைய [illegible]த துணியுமில்லா வெறுங்காலை ஆதரவாகப் ப[illegible]டு கோயிலுக்குள் சென்றார் இந்த செய்கையை அவரது சீடர்களில் சிலரும், மற்றவரும், குறையாய் நினைத்துப்பேசினர் அதற்கு இராமானுஜர், உறங்காவில்லிதாசர், 'தான்' என்ற அகப்பற்றையும், 'தனது' என்ற புறப்பற்றையும் அறவே விட்டவர். ஆகையால் 'இவர் ஒரு சிறந்த மகான்' என்று மற்றவர்களுக்கு எடுத்துக்கூறினார்.

இராமானுஜர் தனது மானசீக குருவான ஆளவந்தாரின் சீடரான 'மாறனேறி நம்பி' என்பவரிடம் மிக்க மதிப்பு வைத்திருந்தார். ஆளவந்தார் தன் கடைசிக்காலத்தில், 'ராஜபிளவை' என்ற நோயால் அவதிப்பட்டு வந்தார். அப்பொழுது ஒருநாள், ரங்கநாதரை தரிசித்துக்கொண்டிருக்கும் பொழுது, அசரீரி ஒன்று 'உமது நோயை, உமது சீடர்கள் யாராவது ஏற்றுக்கொள்ள தயாராக இருந்தால் அவர்களுக்குக் கொடுத்து விடும்' என்று கூறியது. இதனை கேட்டுக்கொண்டு ஆளவந்தாரை சூழ நின்றிருந்த மற்ற சீடர்கள் யாரும் நோயை ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. மிகத் தாழ்ந்த குலத்தில் பிறந்து, ஆளவந்தாரின் அடியவரான 'மாறனேறி நம்பி', தன் குருவின் நோயை, 'குருப்பிரசாதமாக' ஏற்பதாகக் கூறி முன்வந்தார். அவ்வாறே அதையேற்று, அந்நோயால் வருந்தி மாண்டார். அவருக்கு இராமானுஜர், தாமே ஈமச்சடங்குகள் செய்துவிட்டு, நேராக கோவிலுக்குள் வந்துவிட்டார். இதனை மற்றவர்கள் புறத்தே குறை கூறினர். அதற்கு, இராமானுஜர் மாறனேறி நமபியைப் போல் ஒரு பெரிய மகான் இருககமுடியாது என்று கூறி, அவரை விதுரருக்கும், சடாயுவுக்கும் ஒப்பிட்டார். மாறனேறி, தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும், அவர மனத்தளவில மிகவும் உயர்நத வர் என்று இராமானுஜர் கூறினார்.

மகாபாரதத்தில் கிருஷ்ண பரமாத்மா, தருமரிடம் கூறியதாவது, 'ஒருவனுடைய வருணம், அவனுடைய பிறப்பால் அறியப்படுவது அல்ல. அவன் செய்யும் தர்ம, கர்மாக்களை வைத்தே நிர்ணயிக்கப்படுகிறது.'

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து
எத்தனை நலந்தானிலாத சண்டாள
சண்டர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல்
மணிவண்ணற்காள் என்றுள்
கலந்தார் அடியார் தம் அடியார்
எம் அடிகளே"
-(நம்மாழ்வார் பாசுரம்)

"பழுதிலா வொழுக லாற்று பல
சதுப்பேதிமார்கள்
இழிகுலத்தவர்களேது எம்
அடியார்களாகில்"
-(தொண்டரடிப்பொடியாழ்வார்)

இராமானுஜர், பரமாத்மா கிருஷ்ணர் கூறிய வாக்கினையும் மற்றும் ஆழ்வார்கள் கூறியவற்றையும் தம் வாழ்வில் முழுமையாகக் கடைப்பிடித்தார்.

இரமானுஜர் யாதவப்பிரகாசர் என்பவரிடம் தனது குருகுல வாழ்க்கையை மேற்கொண்ட போது, அவருக்கும் அவரது குருவுக்கும் வேதவியாக்யானத்தில் சில கருத்து வேறுபாடுகள் தோன்றின. இதனால் அவர் மீது மனவெறுப்புக்கொண்ட யாதவப்பிரகாசர், இராமானுஜரை தீர்த்துக்கட்ட தீர்மானித்தார். இந்த சதியை மறற சீடர மூலம் அறிந்த இராமானுஜர அவ[illegible]னின்றும் தப்பினார். பிற்காலத்தில, இராமானுஜரின் பெருமைகளையுணர்நத யாதவப்பெரிகாசர் மனம் திருந்தி, இரா

மானுஜர் மூலமாகவே ஸன்யாஸம் பெற விரும்பினார். எனவே அவரையணுகி, தன் விருப்பத்தை யாதவப்பிரகாசர் தெரிவித்தார். இராமானுஜரும், அவருடைய பழையச் செய்கைகளை மறந்து, மனமுவந்து, அவருக்கு ஸன்யாஸம் வழங்கி, 'கோவிந்த ஜீயர்' என்ற திருநாமமிட்டு அவரை கௌரவித்தார். இதன்மூலம் பெருமாள் பக்தர்கள் யாவரும் சமம். அவர்களுக்குள் விருப்பு, வெறுப்பு என்பது கூடாது என்பதைத் தெளிவு படுத்தினார்.

இராமானுஜர், அஷ்டாச்சர மந்திரத்தின் பொருளைத் திருக்கோட்டியூர் நம்பிகளிடமிருந்து அறிய அதிக ஆவல் கொண்டிருந்தார். திருக்கோட்டியூர் நம்பிகள், அத்திருமந்திரத்தின் பொருள் விளக்கத்தை இராமானுஜருக்கு எளிதில் போதிக்க முன்வரவில்லை. இதனால் இராமானுஜர், ஓராண்டுக்காலம் 18 தடவை, ஸ்ரீரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்குச் சென்று, திருக்கோட்டியூர் நம்பிகளைச் சந்தித்து, தன் காரியம் கைகூடாமல் திரும்பவேண்டியிருந்தது. இறுதியில் திருக்கோட்டியூர் நம்பிகள் ரங்கநாதரின் அசரீரி வாக்கால், இராமானுஜருக்கு திருமந்திரத்தின் பொருளை உபதேசிக்க மனமுவந்து அவரை தன் இருப்பிடம் பவித்திரம், தண்டத்துடன் தனித்து வருமாறு அழைத்தார்.

இராமானுஜர், தன் சீடர்களான தாசரதி கூரத்தாழ்வானோடு சென்றார். இதைப் பற்றி திருக்கோட்டியூர்நம்பிகள் வினவ, இராமானுஜர், 'தாசரதியே' தன் 'தண்டு' என்றும், 'கூரத்தாழ்வானே' தன் 'பவித்திரம்' என்றும் கூறினார். இதன் மூலம் இராமானுஜர் தன் சீடர்கள்பால் கொண்டிருந்த அன்பும், தான் கற்றது, அறிந்தது யாவும் அவர்களும் பெறவேண்டும் என்ற உயர்ந்த பண்பும் வெளிப்படுகிறது.

திருக்கோட்டியூர் நம்பிகளிடமிருந்து, அரும்பாடுபட்டு தான் அறிந்த திருநாமமந்திரத்தின் பொருளை, யாவரும் அறிந்து முக்தியடைய வேண்டுமென்று நினைத்தார். மறுநாள் திருக்கோட்டியூர் ஸ்ரீசௌமிய நாராயணப்பெருமாள் கோயில் கோபுரத்தின் மீதேறி எல்லாவித பக்தர்கள் மக்கள் யாவரையும் கூவியழைத்து, திருமந்திரத்தின் இரகசிய விளக்கத்தை யாவருக்கும் உபதேசித்தார். இதனையறிந்த திருக்கோட்டியூர் நம்பிகள், இராமானுஜரையணுகி இச்செயலுக்காக அவர் நரகத்தையடைய வேண்டியிருக்கும் என்று கடுமையாகக் கூறினார். ஆனால் இராமானுஜரோ, தான் ஒருவன் நரகமடைந்தாலும், இதன் பொருளையறிந்த மற்ற மக்கள் யாவரும் முக்தியடைவார்கள் என்று கூறி இன்பமடைந்தார். இப்பெருந்தியாகத்தை கண்ட திருக்கோட்டியூர் நம்பிகள் இராமானுஜரை,

"உடலும் தூய சிந்தையும்
அழுந்தப்புல்லி
ஒன்றிய அன்பினாலே உச்சியை
வளைத்து மோர்ந்து"

"நன்று நன்று அன்ப! உன்னை
நானிலத்து எவர்கள் ஒப்பார்?
தன்னுயிர் தன்னைக் கொண்டு
தான் பிழைத்திடுவதன்றி,
மன்னுயிர்க் கிரங்கித் தன்னை
மைந்தனே? மாய்க்கப்புக்கா
இந்நிலத்தில்லை! இல்லை!
ஏழுலகத்தும் இல்லை!"

என்று பலவாறு போற்றி, நீரே 'எம்பெருமானார்' என்று கூறி மார்போடு தழுவிக்கொண்டார். இந்த சீரிய எண்ணம் மற்றும் பண்பு இராமானுஜரை மேலும் உயர்த்தியது.

இராமானுஜரின் சிறந்த பண்புகளான சாதிவேற்றுமை மறுப்பு, தன்னை அழிக்க நினைத்தவர்களையும் மன்னித்து அருளியது மற்றும் தான் நரகத்தை அடைந்தாலும் மற்றவர் பரகதியடைய வேண்டும் என்ற தியாக மனப்பான்மை, அவரை சிறந்த வைணவ சித்தாந்தவாதியாக மட்டுமின்றி, சிறந்த மனித நேயமுடையவராகவும் உலகுக்கு எடுத்துக்காட்டியது.

அத்திகிரி யருளாள ரடிபணிந்தோன்
வாழியே!
அருட்கச்சி நம்பியுரை
யாறுபெற்றோன் வாழியே!
பத்தியுடன் பாடியத்தைப்
பகர்ந்திட்டான் வாழியே!
பதின்மர் கலையுட் பொருளைப்
பரிந்து கற்றோன் வாழியே!
சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்
தோன் வாழியே!
தொல் பெரிய நம்பி சரண்
தோன்றினான் வாழியே!
சித்திரையிலாதிரை நாள் சிறக்க
வந்தோன் வாழியே!
சீர்பெரும்பூதூர் முனிவன்
திருவடிகள் வாழியே!

எம்பெருமானார் இராமானுஜரின்
திருவடிகளே சரணம்!



# ஸ்ரீமத் இராமாயணமும் சோதிடமும்

திரு. D. கேசவ அய்யங்கார் - ஆலூர்.




முன்னுரை :

நம பாரத நாட்டிற்கு ஸ்ரீமத் இராமாயணமும் மகாபாரதமும் இரு கண்களாக உள்ளன. நம் நாட்டில் மக்கள் இராமாயணத்தை அறிந்த அளவு, மகாபாரதத்தை அறிந்துள்ளார்களா? என்பது கேள்விக்குறியேயாகும். ஜோதிஷம் என்பது வேதாங்கங்கள் ஆறில் ஒன்றாகும். இது வேத முதல்வனின் கண்கள் என்று வேதம் கூறுகிறது. இராமாயணத்தில் ஜோதிடம் எங்கே உள்ளது அல்லது எங்கு எந்த இடத்தில் வருகிறது என்று மேலெழுந்த பார்வையாக பார்ப்பவர்களுக்குத் தெரிய வழியில்லை. ஆனால் இராமாயணத்தை நன்கு கற்றறிந்தவர்களுக்கும், செவி வழியாக நன்கு கேட்டறிந்தவர்களுக்கும் ராமாயணத்தில் சோதிட சம்பந்தம் உள்ளது என்பது நன்கு புலனாகும். ராமாயண காலத்தில் மன்னர்களும், மக்களும், சோதிட சம்பந்தமான விஷயங்களையும், நிமித்தம், சகுனம், நேரம் முதலிய கலைகளிலும் நன்கு தேர்ந்து கடைப்பிடித்து வந்தார்கள் என்று ஊகிக்கமுடிகிறது. தவிர வான சாஸ்த்திரத்தையும் நன்கு கற்று, ஆராய்ந்து அதன் மூலமாக சோதிட சாஸ்த்ரத்தையும் நன்கு தெரிந்து இருந்தார்கள் என்று நினைக்க இடமளிக்கிறது. தற்காலத்தில் நம் மக்களுக்கு "ஜோதிஷம்" என்ற உடனேயே, அதன் மூலமாக தங்களுடைய பலா பலன்களை அறிந்து கொள்வதில் மிகுந்த ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. அதிலும் ஜோதிட பலா பலன்களைத் தெரிந்து கொள்வதிலும், சோதிடம் பார்ப்பவர்களிலும் ஆர்வம் ஆண்களைவிட பெண்களுக்கே அதிகமுள்ளது என்பதிலும் ஐய்யமில்லை.

சோதிடத்தையும், ஜாதக பலா பலன்களையும் நம்பாதவர்கள் கூட, மற்ற யாருக்கும் தெரியாமலோ, மறைமுகமாகவோ, சோதிட பலன்களை தெரிந்து கொள்ளலாமே என்று ஆர்வத்தினால் சோதிடம் பார்க்கிறார்கள். இந்த சோதிடக்கலையானது, தெரிந்து கொள்ளவேணும் என்ற ஆர்வத்தை தூண்டும் கலையாகும். இந்த சோதிட சாஸ்த்திரத்தை நன்கு பயின்றவர்களும், ஆராய்ச்சி வல்லுனர்களும், நம் நாட்டிலுமின்றி வெளிநாடுகளிலும் பலர் உள்ளனர். இந்த சோதிட சாஸ்த்திரத்தை நம் நாட்டில் ஒரு சில பல்கலைக் கழகங்கள், பட்டப்படிப்பிற்குரிய பாடமாக வைத்திருக்கிறார்கள். இதிலிருந்து சோதிடக்கலையும், தெரிந்து கொள்வதற்குரிய ஒரு கலைதான் என்று தெரிகிறது.

## ராமாயணத்தில் சோதிடம்:

இக்கட்டுரையானது சர்வ லோக சரண்யனும் சர்வ ஜகத் ரக்ஷகனுமான ஸ்ரீமந்நாராயணனின் அவதாரமான ஸ்ரீராமனுடைய ஜாதக பலாபலன்களை ஆராய்ந்து எழுதுவதற்காக எழுதப்படவில்லை; வேத முதல்வனான பரம்பொருளின் ஜாதகத்தை ஆராய அற்ப மானிடராகிய நாம் எம்மாத்திரம்? இருப்பினும் சோதிடத்தைத் தொழிலாகக்கொண்ட பல அன்பர்களுடன் உரையாடியும், கலந்து கருத்து பரிமாறிக்கொணட அனுபவத்தையும கொண்டு, சோதிட சம்பந்தமான சில நூல்களைப் படித்ததினால் பெற்ற பயனையும் கொண்டும் இராமாயணத்தில் சோதிட சம்பந்தம் எங்கெங்கு வருகிறது என்பதை எடுத்துககாட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். ஸ்ரீமத் ராமாயணத்தை எழுதியவர் வால்மீகி மகிரிஷியாகும். இவர் நான்முகனின் ஆசியினாலும், சரஸ்வதி தேவியின் அனுக்ரஹத்தினாலும் நாரத பகவானின் உபதேசத்தினாலும் "ராமாயணத்தில் நடந்தது, நடக்கப்போவது, நடந்து கொண்டிருப்பது ஆகிய முக்காலமும் துல்லியமாகவும், உள்ளது உள்ளபடியே தெரிந்[illegible] எழுதுவீர்" என்று அ[illegible]ம் பெற்றவர். வேதமே ஸ்ரீமத் ராமாயணமாக வந்தது என்று பின்வரும் ஸ்லோகம் கூறுகிறது.

"வேத வேத்யே பரே பும்ஸி
ஜாதே தசரதாத்மஜே ।
வேத: ப்ராசேதஸீத் ஸாக்ஷாத்
ராமயணாத் மநா ।।

## ஜோதிஷம் என்பது என்ன?

சோதிடம் என்பது சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்ரன், சனி, ராகு, கேது ஆகிய ஒன்பது கோள்களின் தன்மை, குணங்கள், தவிர இந்த கோள்கள் ஜாதகத்தில் எந்தந்த இடங்களில் எப்படி எப்படி இருந்தால், அவர்கள் கொடுககக் கூடிய பலாபலனகளை விவரிக்கும் கலையாகும். இந்த ஒன்பது கோள்களும் பகவானின் பிரதிநிதிகள் என்று கூறலாம். உதாரணமாக ஒரு நாட்டின் அரசனையோ அல்லது ஆளுனரையோ மக்கள் எளிதில் சந்திக்க இயலாது. ஆனால் அரசனோ, ஆளுனரோ மக்களை கவனித்துக்கொள்ளவும், குறைகளைப் போக்கி, நன்மைகள் செயயும் மற்ற நேரங்களில் செய்ய வேணடிய கடமைகளைச செய்யவும் பல பிரதிநிதிகளை ஏறபடுத்தி உள்ளனர். பிரதிநிதிகள் குற்றம் செய்கிறவர்களைத் தணடிக்கிற[illegible] [illegible]நிதிகள அரசனுடைய அல்லது ஆளுனரின ஆணைப்படி செயல்புரிவதாகக கூறுவார்கள். அதுபோலவே எம்பெருமானும் ஒன்பது கோளகளை, தன் பிரதிநிதிகளாக ஏறபடுத்திச் செயல்படும்படி செயதுள்ளான். கோள்களில் சில ஸ்துதிப் (புகழ்பாடுதல்) பிரியர. சில [illegible]ர்ச்சனை, ஆராதனை, [illegible] செய்தல் ஆகியவற்றில் பிரியர்களாகவும், சில அபிஷேகப் பிரியர்களாகவும் உள்ளனர். கோள்களுக்கு ஒருசில சந்திகளையும் பகவான் கொடுத்துள்ளான். கோள்களை திருப்தி செய்யும் வகையில் நாம் நடந்து கொண்டால், உரிய காலத்தில் பகவானின் அருள் கிடைக்கும் என்று சோதிட நூல்கள் கூறுகின்றன. இனி ராமாயணத்தில் சோதிட சம்பந்தம் பற்றி பார்ப்போம். ஸ்ரீராமர் அவதாரத்திற்கு முன்பே, "சனத்குமாரர்", என்ற மகரிஷி, தசரதருக்கு நான்கு குமாரரகள பிறக்கப் போகிறார்கள் என்பதை ராமாயணத்தில், "பாலகண்டம் சர்க்கம் 9, ஸ்லோகம் 2ல் கூறியுள்ளார். அது போலவே கலைக்கோட்டு மகாமுனியும் (ரிஷய ச்ருங்கர), பா.கா. சர்க்கம், 12, ஸ்லோகம் 12லிலும் நானகு புத்திரரகள் பிறக்கப்போவதை கூறியுள்ளார். ராமாயணம் பாலகாண்டம், ஸர்கம் 18 ல ஸ்லோகம் 8 முதல் 14 முடிய ஸ்ரீராமனுடைய அவதாரத்தையும், மற்ற சகோதரர்களின் பிறப்பைப் பற்றியும் பின்வரும ஸ்லோகங்கள் தெரிவிக்கின்றன.

"ததோ யஞ்ஞோ ஸமாப்தேது
ருதூனாம் ஷட் ஸமதயயு: ।
ததச்ச த்வாதசே மாஸே
சைத்ரே நவாமிகே திதௌ ।।
நக்ஷத்ரே அதிதி தைவத்யே
ஸ்வோச்சஸம்ஸ்தேஷு பஞ்சசு ।
க்ரஹேஷு கர்க்கடகே லக்னே
வாக்பதா விந்துனா ஸஹ
ப்ரோத்யமானே ஜகன்னாதம்
ஸர்வலோக நமஸ்க்ருதம் ।।
கௌசல்யா அஜனயத் ராமம்
ஸர்வ லக்ஷண ஸம்யுதம்
விஷ்னோர் அர்த்தம் மஹாபாகம்
புத்ரம் இஷ்வாகு வர்த்தனம்
கௌசல்யா சுசுபே தேன
புத்ரேணாமித தேஜஸா ।।
யதாவரேண தேவானாம் அதிதி
வஜ்ர பானினா
பரதோ நாம கைகேய்யாம்
ஜஞ்ஞே ஸத்ய பராக்ரமம்
ஸாக்ஷாத் விஷ்ணோர் சதுர்பாகஸ்
ஸர்வைஸ் ஸமுதிதோ குணை:
புஷ்யே ஜாதஸ்து பரதோ
மீனலக்ன ப்ரஸன்ன தீ:
ஸர்பே ஜாதௌ ச சௌமித்ரி
குளீரே அப்யுதிதே ரவௌ:
ராக்ஞ: புத்ரா மஹாத்மானச்
சத்வாரோ ஜக்ஞிரே ப்ருதக் ।।

முன்கூறியுள்ள ஸ்லோகங்களில் வால்மீகி, ஸ்ரீராமனுடைய மற்ற சகோதரர்களின் பிறந்த

நக்ஷத்ரம், லக்னம் முதலியவை களை சந்தேகத்திற்கு இடமின்றியும், தவிர க்ருஹங்களில் ஐந்து உச்சமாக இருந்தன என்றும் கூறியுள்ளார். அதாவது யஞ்ஞும் முடிந்து ஆறு ருதுக்கள் (2 மாதம் ஒரு ருது) கழிந்த பிறகு பன்னிரண்டாவது மாதத்தில், சைத்ர மாதத்தில், சுக்ல பக்ஷ நவமி திதியில், "அதிதி" என்பதை அதிதேவதையாகக் கொண்ட நட்சத்திரமான புனர்பூசத்தில், "சூரியன்" மேஷத்திலும், "குரு" கடகத்திலும், "சனி" துலாததிலும், "செவ்வாய்" மகரத்திலும், "சுக்ரன்" மீனத்திலும் ஆக ஐந்து கிரகங்கள் தங்கள் உச்ச ஸ்தானங்களில் இருக்கையில், குருவும் சந்திரனும் ஒன்றுக் கூடி இருக்கக் கடக லக்னத்தில், "அபிஜத்" என்ற வேளையில், ஸர்வ லோகங்களாலும் நமஸ்கரிக்கப்படும் ஜகன்னாதன் ஸர்வ லக்ஷணங்களுடன் கூடிய ஸ்ரீராமன் கௌசல்யாதேவியிடம் அவதரித்தார். இரண்டாவதுதாக சத்ய பராக்ரமுடைய பரதன், "பூஷ்ய" (பூச) நக்ஷத்திரத்தில் "மீன" லக்னத்திலும், "ஆதிசேஷனை" அதிதேவதையாகக் கொண்ட, "ஆஸ்லேஷா" (ஆயில்ய") நக்ஷத்திரத்தில் கடக லக்னத்தில், சூ[illegible]ன் வலுவாக எழுகையில் சு[illegible]திரைக்கு லக்ஷ்மணனும், சத்ருக்னனும் பிறந்தார்கள் என்று ரிஷி கூறியிருக்கிறார். இதை ஒட்டியே கம்பரும் பாலகாண்டம் அவதாரப் படலம் பாடல் 218 ல்:

"ஆயிடைப் பருவம் வந்தடைந்த எல்லையின்
மாயிருபுவி மண் மகள் மகிழ்வின் ஓங்கிட
வேய் புனர்பூசமும் விண்ணுளோர் புகழ்
தூய கர்க்கடகமும் எழுந்து துள்ளவே"

அதாவது மகப்பேற்றுக்குரிய காலம் வந்தபோது, மிகப்பெரிய பூமிதேவி மனமகிழ்ச்சியினால் பூரித்தும், "வேய்" என்ற பெயருடைய பூனர் பூச நக்ஷத்திரமும், தேவர்களும் புகழும் தூய்மையான, "கர்க்கடகம்" என்ற கடக லக்னமும் மகிழ்ச்சியினால் துள்ளி குதித்தனர் என்று குறிப்பிடுகிறார். அடுத்தப் பாடலின் பின் இரண்டு அடிகளில் பின்வருமாறு கூறியுள்ளார்.

"கருமுகிற் கொழுந்து எழில் காட்டும் சோதியைத்
திருவுறப்பயந்தனள் திறங்கொள் கோசலை"

அதாவது கோசலையானவள், ப்ரளய காலத்தில் எல்லா உலகங்களையும் தன் வயிற்றின் உள்ளே அடங்கி வைத்திருப்பவனும், வேதங்களினால் கூட அறியமுடியாதவனும், நீலமேக ச்யாமள ஒளியை தன்னிடத்திலே கொண்ட ஒளி வடிவானவனுமான "திருமாலை" பெற்ருள் என்கிருர். பரதன் பிறப்பை அடுத்தப் பாடலில் சொல்கிருர்.

"ஆசையும் விசும்பும் நின்[illegible] அமரர ஆர்த்[illegible]
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்
பூசமும், மீனமும் பொலிய நல்கினாள்
மாசற கேகயன் மாது மைந்தனை"

அதாவது திசைகள் முழுவதிலும், ஆகாயத்திலும் கூடி நின்ற அமரர்கள் ஆரவாரம் செய்யவும், இந்திரன் முதலானோர் வாழ்த்தி வணங்கவும், பூசநட்சத்திரமும் மீனலக்னமும் விளங்கவும் கேகய நாட்டு மன்னன் மகளான கைகேயி ஒரு புதல்வனைப் பெற்ருள். இலக்குவனின் பிறப்பை பின்வருமாறு கூறுகிருர்.

"தனை அவிழ் கருவுடைச் சயில கோபனும்
கிளையும் அந்தர மிசைக் கெழுமி ஆர்த்தெழ
அளைபுகும் அரவினோடு அலவன் வாழ்வுற
இளையவள் பயந்தனள் இளைய மென்கொடி"
(பா.அ.ப. பாட்டு 285)

அதாவது பறக்கும் மலைகளை கோபித்து அதன் சிறகுகளை வெட்டியவனும், அரும்புகள் கட்டவிழ்ந்து மலரும் கற்பக மரங்களையுடையவனுமான இந்திரன், தன் சுற்றத்தோடும், தேவர்களும் கூடி ஆகாயத்தில் நிறைந்து நின்று ஆரவாரம் செய்யவும், புற்றிலேபுகும் தன் மையுடைய பாம்பின் வடிவமான ஆயில்ய நட்சத்திரமும் கடக லக்னமும் நல்வாழ்வு பெற, சுமித்திரை இளைய பெருமாள் என்கிற இலக்குவனை பெற்றெடுத்தாள். அடுத்த பாடலில் சத்ருக்னனின் அவதாரத்தையும் கூறுகிருர்.

"படம்கிளர் பல்தலைப் பாந்தள் ஏந்து பார்
நடம் கிளர் தரமறை நவில நாடகம்
ம[illegible] லும் மகமுமே [illegible]ழ்வின் ஓங்கிட
விடங்கிளர் விழியனான் மீட்டு யீன்றனன்"

அதாவது படத்தோடு விளங்கும் பல தலைகளையுடைய ஆதிசேடன் சுமந்து நிற்கும் பூமாதேவி ஆனந்தக்கூத்தாடவும், வேதங்கள் மகிழ்ச்சியடையவும், மகநட்சத்திரமும், சிம்ம ராசியும் வாழ்விலே சிறப்படையவும், விஷம் போன்று கருமையாய் விளங்குகிற கண்களை

உடைய சுமித்திரை மீண்டும் ஒரு புதல்வனை (சத்ருக்கனனை) பெற்றுள் என்கிறுர். இவ்வாறு புதல்வர்கள் பிறந்ததை பணிப் பெண்கள் மன்னரிடம் கூறி மகிழ்ந்திருந்தனர். அப்போது அந்தணுளர்கள் (சோதிட வல்லு னர்கள்) கூடி புதல்வர்கள் பிறந் தபோது கிரகங்களும், நட் சத்திரங்களும் நின்ற நிலையை நன்கு ஆராய்ந்து இனி உலகத் திற்கு துன்பம் இல்லை என்று கூறினார்கள் என்று பாலகா, அவதாரப் படலம், பாடல் 288ல் கூறியுள்ளார். (கம்பராமாயணப் பாடல்களும் உரையும்: திரு. டாக்டர் பூவண்ணன் எழுதிய வர்த்தமானன் பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டது - நன்றி.) இது வரையிலும் வால்மீகியும், கம்ப னும் கிட்டத்தட்ட ஒரேவிதமாக ஸ்ரீராமன் மற்றும் சகோதரர்க ளின் அவதாரத்தையும் சொல் லியுள்ளனர். ஆனால் சத்ருக் கனனின் பிறப்பின் நட்சத்திர மும், ராசியும் வால்மீகி கூற வில்லை. கம்பனோ தெளிவாக சுமித்திரை மகநட்சத்திரத்தில் சிம்ம ராசியில் மீண்டும் ஒரு புதல்வனைப் பெற்றுள் என்று கூறியிருப்பதுதான் ஒரு மாறு பாடு. மேற்சொன்ன ஸ்ரீராம னின் அவதாரத்தைக் கூறும் பாடலைத் தவிர, பின்வருகிற ஒரு பாடலும் ராமனின் அவ தாரத்தைக் கூறும்.

"மேட மாமதி திதி நவமி மீன்கமை
நீடுறு மாலை கர்க்கடக நீதிசேர்
ஓடை மாகளினா னுதய ராசிகோள்
நாடின ஏகாதசர் நால்வர் உச்சரே"

இப்பாடலைப்பற்றி அபிப்பிராய பேதங்கள் இருப்பதாகத் தெரி கிறது. ஒரு சாரார் இது கம்பர் பாடலே அல்ல என் றும், இடைச் சேர்க்கை என்றும், இது ஒரு தனிப்பாடல் என்றும் கூறுகிறுர்கள். பிரபல தமிழ் அறிஞராகிய திரு. வை.மு. கோபால கிருஷ்ணமாசாரிய ரால் இயற்றப்பட்ட உரை யுடன் கூடிய கம்பராமாயண பதிப்பில் (சுமார் 70 வருடங்க ளுக்குமுன் சென்னை கணேசா அச்சுக்கூடத்தில் பதிப்பித்தது), மேலே கூறிய பாடலை அவ தாரப்படலத்தில் கூறி, பாடல் உள்ள பக்கத்தின் அடிக்குறிப் பில் இப்பாடல், பல கம்பரா மாயண பதிப்புகளில் காணப் படவில்லை என்றும் குறிப்பிட் டிருக்கிறுர். ஸ்ரீராமன் மற்ற சகோதரர்களின் அவதாரத்தைக் கூறிய வால்மீகியோ, கம்பனோ சோதிட விஷயமாக சம்பந் தமுடைய ஒன்பது கோள்க ளில், "புதன், ராகு, கேது" ஆகிய மூன்று கோள்களைப் பற்றி ஒன்றுமே கூறுததைக் கவனிக்க வேண்டியதாகிறது. இது ஆராய்ச்சி செய்யவேண் டிய விஷயமாகும். பொதுவாக புதன் சூரியனை ஒட்டியே சஞ் சாரம் செய்யும் கோள் என் பதினால் புதன் சூரியனுடன் மேஷ ராசியில் இருந்ததாக எடுத் துக்கொள்ளலாமா என்பது கேள்விக்குறியாகும். சோதிட நூல்களில் எல்லாம் புதனுக்கு மிதுனமும், கன்னியும் ஆக இரு வீடுகளும் (ராசி) உடைய வன் என்று கூறியிருந்த போதி லும் இருவீட்டை உடையவ னாக இருந்தும், இரு கவிக ளுமே, "புதனை"ப் பற்றி ஏன் குறிப்பிடவில்லை என்பது ஆராய்ச்சி செய்து முடிவுக்கு வரவேண்டிய விஷயமாகிறது. தவிர "ராகு, கேது" ஆகிய இரு கோள்களுக்கும், சொந்த வீடோ அல்லது உச்சவீடோ இல்லை என்றும், இவர்கள் எந்த வீட் டில் உள்ளனரோ அந்த வீட்டின் அதிபதி கொடுக்க வேண்டிய பலன்களை இவர்கள் கொடுப் பார்கள் என்றும் இவ்விரு கிர கங்களும் "சாயா கிரகங் கள்" என்றும் சோதிட நூல் கள் கூறியிருக்கின்றன. வால்மீ கியோ, கம்பனோ ஸ்ரீராமன் மற்றும் சகோதரர்களின் பிறப் பைப் பற்றிக் கோள்கள் பற்றி கூறும்போது, "ராகு கேதுவைப் பற்றி அவதாரத்தின் போது ஏதுவும் கூறவில்லை என் பதை கவினிக்க வேண்டியதும் ஆராய்ச்சியும் செய்யவேண்டிய தாவும் உள்ளது. இருப்பினும் ராகு கேதுவைப் பற்றி ராமாய ணத்தில் பல இடங்களில் இரு கவிகளும் இந்த கோள்களைப் பற்றிக் கூறியிருப்பதை உதா ரணத்தின் மூலம் காட்டமுடி கிறது. (அயோத்யா காண் டம், ஸர்க்கம் 4 ஸ்லோகம் 17 முதல் 19 வரை) இதில் தசர தன் தான் கெட்ட குறிகள் கண்டதாகவும், சோதிட வல்லு னர்களை கேட்டபோது, தசரத ருடைய நக்ஷத்திரமானது ராகு, சூரியன், செவ்வாய் ஆகிய கிர கங்களால் பீடிக்கப்பட்டிருப்பதா கச் சொல்லப்படுகிறது. இத னால் ஸ்ரீராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டவிரும்புவதாக தசர தர் சொன்னதாகத் தெரிகிறது. மற்றொரு உதாரணமாக சுந் தரகாண்டம், முதல் ஸர்க்கம் ஸ்லோகம் 169ல் ஹனுமான் கடலைத் தாண்டும் போது ஸுரஸ்ஸை என்ற அரக்கியின் வாயில் புகுந்து வெளிவந்ததை கூறும்போது பார்க்கலாம். "தம் த்ருஷ்ட்வா வதனான் முக்தம் சந்த்ர ராகு முகாவதிவ" என்கி றுர் வால்மீகி. அதாவது ராகு வின் வாயிலிருந்து விடுபட்ட சந்த்ரனைப் போல என்கிறுர். மற்றும் சுந்தர காணடம், ஸர்க் கம் 1, ஸ்லோகம் 193ல் ஹனு மான், ஸிம்ஹிகையின் வாயில் புகுந்து வந்ததைக் குறிப்பி டும்போதும் காணலாம்.

"ஆஸ்யே தஸ்யா நிமஜ்ஜந்தம்
ததர்ஸ; சித்தசாரணு:
க்ரஸ்ய மானம் யதா சந்த்ரம்
பூர்ணம் பர்வானி ராகுணு

அதாவது, "ஸிம்ஹிகையின் வாயில் புகும் அனுமனை சித்தர்

களும், சாரணர்களும், பௌர்ண மியின்று ராஹுவினால் விழுங் கப்படும் பூர்ண சந்த்ரனைப் போல பார்த்தார்கள். கம்ப னும் சுந்தரகாண்டம், கடல்தாவு படலம், பாடல் 64ல் அனு மன் கடலைத்தாண்ட ஆகா யத்தில் பறந்து செல்வதைக் கூறும்போது, வாளுக்கு ஒப் பான, வெண்மையான பற்கள் வரிசையாய் விளங்க, வான மெல்லாம் நிரம்பிய உடம்பை உடைய அனுமன், சூரியனை சில சமயம் மறைக்கும் ராகு என்னும் கோளை ஒத்தான்' என் கிருர். (நீள ஒத்து உயர் வாலின் விசும்பு நிரம்பமெய் யன், கோள்ஒத்த பொன்மேனி) (கம்ப. ரா. சுந்த கா. கடல் தாவு படலம் பாடல் 64ல், 2வது, 3வது அடி) இவற்றிலி ருந்து ராகு கேதுவைப் பற்றி ராமாயணத்தில் சொல்லப்பட்டி ருக்கிறது என்பது நன்கு புல னாகும். ராமாயண காலத்தி லிருந்த சோதிடக் கலையிலும் ராகு கேது கோள்கள் இருந்தன என்பது தெளிவாகிறது. இனி ஸ்ரீராமனின் ஜனன ஸ்லோகத் தைக் கவனிக்கலாம்.

"ததச்ச த்வாதஸே மாஸே
சைத்ரே நவாமிகே திதௌ"

என்று உள்ளது. இதில் "சைத்ரே" என்ற பதத்தை கவ னித்தால் "சைத்ரம்" என்பது சாந்த்ராயண ரீதியாக, பங்குனி மாத அமாவாசைக்கு அடுத்த பிரதமை தினத்தை, "சைத்ர சுத் தம்" என்பார்கள். சாந்த்ராய ணத்தை அனுஷ்டிப்பவர்களுக்கு, அமாவாசைக்கு அடுத்த தின மான பிரதமை முதல் அடுத்த மாதம் தொடங்கும். இதன் படி பார்த்தால் ஸ்ரீராமர் பங் குனி மாதத்தில் (மீன மாதம்) அமாவாசைக்கு அடுத்த சுக்ல நவமியில் அவதரித்திருக்கக்கூ டுமோ என்று நினைக்க இட மளிக்கிறது. மற்றும் ராமன் இஷ்வாகு வம்சமாகிய சூரிய வம்சத்தில் தோன்றியபடியால், "சைத்ரே" என்பதற்கு மேட மாதம் என்றும் எடுத்துக்கொள் ளலாம் என்றும் தோன்றுகி றது. ஆனால் கவிகள் தெளி வாகவே 'சைத்ரே' என்று கூறிவிட்டனர். அக்காலத்தில் இக்காலத்திலுள்ள தமிழ் மாதங் களின் பெயராகிய சித்திரை, வைகாசி என்று பெயர் இருந்த தாகத் தெரியவில்லை. இதுவும் ஆராய்ச்சிக்குரியதாகும்.

இனி கிரகங்களுக்கு அடுத்த படியாக ராமாயணத்தில் நக்ஷத் திரங்களின் அதிதேவதைக ளுக்கு முக்யத்வம் கொடுக்கப் பட்டிருந்ததை எடுத்துக்காட்டப் படுகிறது. ராமர் பிறப்பை குறிப்பிடும் போது வால்மீகி, "நக்ஷத்ரே அதிதி தைவத்யே" என்கிருர். ஸ்ரீராமனின் ஜன் மநக்ஷத்ரமான புனர்பூசத்திற்கு "அதிதி" என்பது அதிதேவதை யாகும். அதிதேவதைகளுக் கும் சக்தி உண்டு என்று சோதிட நூல்கள் தெரிவிக்கின் றன. சோதிடத்தில் உள்ள பலமுறைகளில் நக்ஷத்ரங்களின் அதிதேவதையை அடிப்படையா கக் கொண்டு பலன் சொல் லுவதுண்டு. ஸ்ரீகிருஷ் ணமூர்த்தி பத்ததி என்பது இந்த அடிப்படையில்தான் பலன் சொல்லப்படுகிறது. மற் றும் "ஸர்பே ஜாதௌ ச சௌமித்ரி" என்று த்விவச னத்தில் (இருமையில்) சொல் லியிருப்பதினாலேயே, ஆதிசே ஷனை அதிதேவதையாகக் கொண்ட, அயில்ய நக்ஷத்தி ரத்தில், இலக்குவ சத்ருக்னன் கடக லக்னத்தில் சூரியன் வலுவாய் எழுகையில் ஜனித் தார்கள் என்கிருர் வால்மீகி.

மற்ருெரு உதாரணமாக ஸ்ரீராம னின் விவாஹத்திற்கு நாள் குறிப்படும் போது, "விவாஹத் திற்குரிய நற்பலன்களை அளிக் கக்கூடியதும், விவாஹத்திற்கு மிகவும் ஸ்ரேஷ்டமாக எடுக் கப்பட்டுள்ளதுமான நக்ஷத்ரம், "உத்திரம்" என்கிற "உத்தர பல் குனி" நக்ஷத்ரமாகும். இதன் அதிதேவதை "பகன்" எனப் படும். இந்த நக்ஷத்திரத்தி லேயே "சீதா ராம" விவா ஹத்தை நடத்த வேண்டும் என்று ஜனகர் கூறுவதாக ராமா யணம் கூறுகிறது. ஸ்லோகமா வது:

"உத்தரே திவஸே ப்ரம்மன்
பல்குனீப்யாம் மனீஷின:
வைவாஹிகம் ப்ரஸம்ஸந்தி
பகோ யத்ர ப்ரஜாபதி: ||

மேலும் விவாஹத்திற்கு பூர் வாங்கமாக, பித்ரு தேவ தைகளை அதிதேவதையாகக் கொண்ட "மக" நக்ஷத்திரத்தில், விரதம், கோதானம், நாந்தீமு கம் முதலியவைகளை செய்து, உத்தர பல்குனியில் விவாஹம் என்று பாலகாண்டம் ஸர்க்கம் 71 ஸ்லோகம் 24ம், ஸர்க் 72 ஸ்லோக 13ம் கூறுகின்றன. இதுவும் தவிர ஸ்ரீராமனே அதி தேவதையை குறிப்பிடும் இட மும் வருகிறது. அதாவது ராவண யுத்தத்திற்கு புறப்ப டுகையில், உத்திர பல்குனியில் அபிஜித் முகூர்த்தத்தில் புறப் பட வேண்டும் என்றும், மறு நாள் ஹஸ்தம் வந்துவிடுவதால், அதன் அதிதேவதை அனுகூல மாயில்லை என்று ஸ்ரீராமனே கூறியுள்ளதை யுத்த காண்டம் ஸர்க்கம் 4 ஸ்லோ. 6 சொல் கிறது. பெரிய உடையார் என்று பெயர் பெற்ற ஜடாயு வும் ராவணன் சீதையை தூக் கிக் கொண்டு சென்ற நேரம் "விந்தம்" என்ற நேரமானபடி

யால், இந்த நேரத்தில் இழந்த பொருள் மீண்டும் கிடைத்துவிடும் என்றும் கூறியுள்ளார்.

சோதிடக்கலையில் இருக்கும் கிரகங்கள், நக்ஷத்ரம், நக்ஷத்ர அதிதேவதை இவைகளுக்கு உள்ள சிறப்பு, முக்யத்துவம் முதலியவைகளை ஓர் அளவுக்கு ஸ்ரீமத் ராமாயணம் சோதிட சம்பந்தம் பெற்றுள்ளதை எடுத்துக்காட்டலாயிற்று. சோதிடக் கலையின் மற்றப் பிரிவுகளான நிமித்தம், சகுனம், அறிகுறிகள், நேரம், சாமுத்ரிகா லக்ஷணங்கள், கனவு முதலியவற்றைப் பற்றியும் பேசப்பட்டுள்ளது என்பதையும் தெரிவிக்கவேண்டியுள்ளது.

முடிவுரை :

கிரகம் என்ற சொல்லுக்கு, க்ருஷ்ணந்தீதி க்ரஹ: என்று சொல்லப்படுகிறது. கிரகங்கள் பிடிக்கின்றன என்று சொல்லப்படுகின்றன. சுபா சுப பலன்களை கொடுப்பதற்காகப் பிடிக்கின்றன என்பது பொருள். இக்கோள்கள் சுபஸ்தானம், சுபர பார்வை உச்சம், ஆட்சி என்று இருக்குமானால் நல்ல பலன்களைக் கொடுக்கும். தீய (அசுப) ஸ்தானம், நீசம், நீசர் பார்வை மற்றும் மறைவு ஸ்தானங்களில் இருந்தால் அவ்வளவாக நல்ல பலன்களைக் கொடுக்கமுடியாது என்றும் சோதிட நூல்கள் கூறுகின்றன. மனிதர்களின் அகம்பாவம், கொட்டம், இவைகளை அடக்குவதாகக்கூட, சில சமயங்களில் கிரகங்களில் பிடித்து துன்பத்தைக் கொடுக்கிறது என்றால் அது மிகையாகாது. இக்கோள்கள், அரசன் முதல் ஆண்டி வரையிலும், ஏன் உலகத்தையே கூட பிடித்து ஒரு ஆட்டு ஆட்டி வைத்து விடுகிறது. இவ்விதம் துன்பத்தைக் கொடுப்பதில் "சனி" கிரகம்தான் மிக மிக வல்லமை படைத்தவர். இவர் நல்ல பலன்களைக் கொடுக்கும்போதும் வாரி, வாரி வழங்கும் தன்மையுடையவர். இவர் மகான்கள், அனுபூதி மான்கள், யோகிகள், ஏன் பகவானைக் கூட பாகுபாடின்றிப் பிடிக்கும் தன்மையை உடையவர். இக்கோள் இவர்களைப் பிடிக்கும் போது மட்டும், அவர்களுடைய அனுமதியின் பேரில்தான் பிடிக்கிறார்கள். இந்த சனிககோள் ஸ்ரீபகவத் ராமானுஜருடைய பஞ்சாசார்யர்களில் ஒருவரும், பெரிய யோகியும், காஞ்சி தேவாதி ராஜப் பெருமானுடன் நேரில பேசும் பாக்யம் பெற்றவருமான திருக்கச்சி நம்பிகளையும் கூட, ஏழரை நாழிகை பிடித்து ஒரு ஆட்டு ஆட்டி வைத்துவிட்டது என்று குருபரம்பரை ப்ரபாவம் தெரிவிக்கிறது.

ஒருசில ஆண்டுகளுக்குமுன், ஒரே ராசியில் எட்டு கிரகங்கள் ஒன்றாக சேர்க்கை ஏற்படும்போது, நாட்டிற்கும், மக்களுக்கும் என்ன நடக்குமோ என்று மக்கள் அச்சமடைந்திருந்தனர். அது சமயம் சமீபத்தில் முக்தி அடைந்த மகானும், ஞானியுமான காஞ்சி மஹாபெரியவர் அவர்கள் பயப்படவேண்டாம் என்று நல்லாசி கூறி, மக்களை ஞானசம்பந்தர் அருளியுள்ள "வேயுறு தோளி" எனத்தொடங்கும், "கோளறு பதிகத்தை" பக்தி சிரத்தையுடன் படித்து வந்தால் எல்லாம் நல்லதாகவே முடியும் என்று ஆசி கூறியபடி மக்கள் கோளறு பதிகத்தைப் படித்து நன்மைபெற்றது நாம் என்றும் மறக்க முடியாதது. ஒரு சமயம் கோசல நாட்டிற்கு இந்த சனிக் கோளினால் பெரும் துன்பம் நேரிட இருந்தபோது, வசிஷ்டரின் வாக்குப்படி தசரதன் சனியிடம் நேரில் சென்று தடுப்பதற்கும், பிரார்த்திக்கவும் ஆயுதங்களுடன் தேரில் சனி கிரகம் இருக்குமிடம் சென்று யுத்தம் செய்ய முற்பட்டான. அப்போது தன்னுடன் போருக்கு வந்த தசரதனைப் பார்த்து அகமகிழ்ந்து என்னவேண்டும் என வினவ, சனி பகவானால் தன கோசல நாட்டிற்குத் துன்பம் யாதும் வராமல் இருக்கவேண்டி, சனி பகவானை ஸ்தோத்ரம் செய்து தன நாட்டிற்கு நன்மையை பெற்றான் தசரதன் என்று புராணம் கூறுகிறது.

மானிடர்களாகிய நாம் கோள்களிடமிருந்து நன்மையைப் பெற தினமும் பக்தி சிரத்தையுடன் நவகிரகங்களின் பெயர்களடங்கிய ஸ்லோகமான 'ஆதித்யாய ச சோமாய, மங்களாள புதாய ச, குரு சுக்ர, சனிப் யச்ச ராஹவே, கேதவே நம" என்பதை பாராயணம் செய்யலாம். கோளறு பதிகத்தையும் படிக்கலாம். தவிர ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்துள்ள "பாதுகா ஸஹஸ்ரத்தில்" காஞ்சன பத்தியில் உள்ள கீழ்வரும் ஸ்லோகத்தைச் சொல்லலாம்:

"கநகருசிரா காவ்யாக்யாதா
சநைஸ் சரணே சிதா ।
ச்ரித குரு, புதா பாஸ்வத்ரூபா
த்விஜாதிப ஸேவிதா ।।
விஹித விபவா நித்யம் விஷ்ணே:
பதே மணி பாதுகே
த்வமஸி மஹதீ விஸ்வேஷாம் ந:
சுபா க்ரஹ மண்டலீ ।।

இந்த ஸ்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் சூரியன் முதலான ஏழு கிரகங்களின் பெயர்களையும், ராஹு, கேதுக்களின் பீஜாக்ஷர மந்த்ரத்தையும் கொடுத்துள்ளார். எனவே நாம் முடிந்தவரையில் மேலே கூறப்பட்ட ஸ்தோத்ர துதிகளை பக்தி சிரத்தையுடன் படித்துக் கோள்களின் நன்மையைப் பெற்று பகவானின் திருவருளைப்பெற முயல்வோமாக. 

# திருப்பிரிதியின் இயற்கை வளத்தில் காஞ்சி ஸ்வாமிகளின் உரைவளம்

டாக்டர் கோ.க.அ. ரங்கராஜன் - திருப்பதி.

## முன்னுரை :

திருமகள் கேள்வன் தானிட்ட வழக்கால் நித்ய விபூதி, லீலாவிபூதி என்னும் இரு செல்வங்களையும் தன்னிடத்தே கொண்டுள்ளான். நித்ய விபூதியென்னும் பரமபதத்தில் அனந்த கருட விஷ்வக்ஸேனர் முதலிய நித்ய ஸூரிகளுக்கு 'ஸதா பச்யந்தி ஸூரய:' என்கிறபடியே எப்போதும் காட்சி கொடுத்த வண்ணமிருக்கிறான். லீலாவிபூதியென்னும் இந் நிலவுலகத்தில் நம் போன்ற ஜீவன்களுக்கு அவ்வாறு காட்சி கொடுக்க விருப்பங்கொண்டு தன்னை (இறைவனை) அடைய நமக்குக் கரண களேபரங்களைக் (கண், கை, கால் முதலிய உறுப்புக்களையும் உடலையும்) கொடுத்துதவுகிறான். சேதநன் (ஜீவன்) ஸம்ஸாரமாகிய இப்பெருங்கடலிலே மூழ்கி அவனை மறந்து அக்கரண களேபரங்களை இறைவனுக்காகப் பயன்பெறச் செய்யாமலிருக்கிறான். இதனைக்கண்ட இறைவன் மிக்கத் துயரங்கொண்டு பக்திப் பெருங்கடல்களான ஆழ்வார்களைத் தோற்றுவித்து அவர்களுக்கு மயர்வற மதிநலம் அருளி உலகு உய்ய வழிசெய்தான். அவர்களில் 'கலியன்' என்று போற்றப்படும் திருமங்கையாழ்வார் கடைக்குட்டியானவர். இவர்தம் பாசுரங்களில் திவ்ய தேசங்கள் தோறும் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களைப் போற்றியதோடு நில்லாமல் அத்திவ்ய தேசங்களின் இயற்கை வளங்களையும் பாடியுள்ளார்.

ஆழ்வார்களின் திருவுள்ளக் கருத்தைப் படம் பிடித்துக்காட்டும் திறமை, பெரியவாச்சான் என்னும் ஆசாரியருக்குப் பின் 'காஞ்சி ஸ்வாமி' எனப்படும் ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளுக்கே உள்ளது.

## திருப்பிரிதியின் இயற்கைவளம்

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வனான ஸ்ரீமந்நாராயணன் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் நூற்றெட்டாகும். அந்நூற்றெட்டில் ஒன்றான திருநறையூர் நம்பி எம்பெருமானிடம் திருவிலச்சினை பெற்று, மந்திர உபதேசமும் பெற்றவுடன் அம்மந்திரத்தின் பெருமையை முதல் பத்துப் பாடல்களில் சொல்லிய பின்னர் பற்பல திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களை வணங்கி வழிபட்டுப் பாடல்களைப் பாடிச் சென்றார், திருமங்கையாழ்வார். முதலாவதாக இவர் இமய மலையின்கண் அமைந்துள்ள திருப்பிரிதி என்னும் திவ்ய தேசத்தை அணுகி எம்பெருமானை வழிபட்டதோடு நில்லாது அவ்வூரின் இயற்கை வளத்தையும் போற்றிப் பாடுகிறார்.

ஓரிரு பாடல்களைத் தவிர அனைத்துப் பாடல்களிலும் இப்பதிகத்தின் இரண்டடிகளாலே எம்பெருமானின் பெருமையையும் மற்ற பின்னிரண்டடிகளாலே திருப்பிரிதியின் இயற்கை வளங்களையும் பாடுகிறார். இப்பதிகத்தில் ஆழ்வார் தம் நெஞ்சிற்கு இதம் உரைத்துக் கூறும் பாங்கு போற்றுதற்குரியது.

'வாலிமாவலத் தொருவன துடல்கெட
வரிசிலை வளைவித்து
. . . . . . . . . . . . . . . . . . . . . .
ஆலிமாமுகி லதிர்தர அருவரை
அகடுற முகடேறி
பீலிமாமயில் நடஞ்செயும்
தடஞ்சுனைப்
பிரிதி சென்றடை நெஞ்சே'

என்னும் முதல் பாசுரத்தில் 'மஹாபலிசாலிகளுள் அத்விதீயன்' என்று போற்றப்படும் வாலியைக் கொன்றவன் நீரும் நிழலும் மரமும் மணமும் கண்டு உகந்திருந்து ஸம்ஸாரிகளான நமக்குக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்குமிடம் திருப்பிரிதி என்கிறார்.

இங்கு மேகங்களானவை சிறு துளிகளைப் பெய்து கொண்டு அதிரா நிற்க, அம்முழக்கத்தைக் கேட்ட மயில்கள் மகிழ்ச்சி ததும்ப மலையினுச்சி மீது ஏறிக்கொண்டு கூத்தாடுகின்றனவாம். 'மாமுகில் அதிர்தர அருவரை...............நடஞ்செயும்' என்றவிடத்து "வாத்யங்கள் வாய்தால் (முழங்கினால்) கூத்தாடுவாருடம்பு பேசாராதிரா

திறே; காலுக்கீடாக வாய்த்த வாறே ஆடுவாரைப் போலே அவை முழங்க அவை ஆடா நிற்குமாயிற்று" என்று வியாக்கியான சக்ரவர்த்தியென்று போற்றப்படும் பெரியவாச்சான் பிள்ளை திறம்பட உரை வழங்குகிறுர்.

'அருவரை அகடுற முகடேறி' என்றவிடத்து, "கீழ்வயிறனது மலையிலே தழுவ கொடுமுடியின் மீதேறி" என்கிற பெரியவவாசசான்பிள்ளை உரைக்கு 'பீலிமாமயில்களா கையாலே தோகையின் கனத்தாலே பறந்து சென்று ஏறமாட்டாமல் மெல்லத் தவழ்ந்து சென்று ஏறுகிறபடி' என்று தம் உரையை வழங்குகிறுர், உரைக்கு உரைகாணும் உத்தம உரைகாரர் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள். மேலும் அஃறிணைப் பொருள்களும் ஆனந்தமாக வாழும் திவ்ய தேசத்திலே உயர்திணைப் பொருளான 'நீ போய்க் களித்து வாழவேண்டாவோ நெஞ்சே' என்னும் ஆழ்வாரின் திருவுள்ளக் கருத்தைப் படம் பிடித்து நமக்கு அருளுகிறுர் காஞ்சி ஸ்வாமிகள்.

இரண்டாம் பாட்டில் சீதைப் பிராட்டிக்காக இலங்கையை யழித்த வரலாற்றைக் குறிப்பிடுகிறுர். இந்நிலவுலகின் வாசனையே அறியாத நித்ய ஸூரிகள் என்னும் தேவர்கள் செய்யத்தக்க கைங்கர்யங்களை வலக்கை இடக்கையறியாத வானரர்களும் செய்யும் படியாகச் செய்தருளிய எம்பெருமானின் விசித்திர சக்தியை,

'கலங்க மாக்கடலரிகுலம்
பணிசெய்ய
அருவரை யணைகட்டி
இலங்கை மாநகர் பொடிசெய்த
வடிகள்தாம்
இருந்த நலிமயத்து'

என்று போற்றுகிறுர் ஆழ்வார்.

இப்படிப்பட்ட இமயமலையில் மலைபோன்ற பருத்த வடிவையுடையனவாயும், வடிவுக்கேற்றாற்போல் மிடுக்கையுடையனவாயும், மிடுக்குக்குத் தகுந்தாற்போல் மிகுந்த கோபத்தை யுடையனவாயுமுள்ள மதநீரைச் சொரிகின்ற யானைகள் துன்பப்படும்படியாக, வாள்போன்ற பற்களையுடைய சிங்கங்கள் திரியும் படியான திருப்பிரிதி என்று இயற்கையின் நிலையினை வருணித்துள்ளார் ஆழ்வார்.

மூன்றும் பாடலில் அசுராவே சங்கொண்ட ஏழு எருதுகளோடு பொருது கண்ணபிரான் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொண்ட வரலாற்றை ஆழ்வார் கூறுகிறுர்.

இடி இடித்தாற்போல் பயங்கரமாக ஆயர்களுடைய 'இனவிடைகளை அடர்த்தவன்' என்ற அடைமொழியினால் பிரதிபந்தகங்களைப் (இடையூறு) போக்கி அபிமத (மிகவும் விரும்பிய) விஷயத்தோடே (நப்பின்னையோடே) புணர்ந்த பெருமான் நம் போன்ற அபிமதர்களையுஞ் சேர்த்துக்கொள்வதற்காக இமயமலையின்கண் அமைந்துள்ள திருப்பிரிதியில் எழுந்தருளியிருக்கிறுன். என்ற உட்கருத்தை உரைகாரர் வெளியிடுகிறுர்.

கண்ணபிரான் நப்பின்னைப் பிராட்டியோடு உறங்குவதை, இயற்கையை வருணிப்பதன் மூலமாகக் குறிப்பாகக் காட்டுகிறுர் ஆழ்வார். அதாவது வேங்கை மலர்கள் அழகிய பாறைகளின் மீது மிக அதிகமாக உதிர்ந்து படுக்கை விரி[illegible]ற்போன்[illegible], அதன் மீது யானைய[illegible]னது தன் பேடையோடு கிடந்துறங்குவதற்குப் பாங்காக வண்டுகள் செவிக்கினிமையாக இன்னிசை பாடப்பெற்ற பிரிதியைச் சென்று சேர் நெஞ்சமே என்பதாகும்.

நாலாம்பாட்டில், நரசிம்மாவதாரத்தைப் பேசுகிறுர். முந்திய அவதாரமாகிய வராக அவதாரம் ஆழ்வார் நினைவுக்குவர

'இறங்கி யேனங்கள் வளைமருப்
பிடந்திடக்
கிடந்தரு கெரிவீசும்
பிறங்கு மாமணி யருவியொடிழிதரு
பிரிதி சென்றடை நெஞ்சே'

என்கிறுர். அதாவது அங்குள்ள பன்றிகள் குனிந்து தம் வளைந்த கொம்புகளாலே மாணிக்கப்பாறைகளைக் குத்திப் பெயர்த்திடுகின்றன. பெயர்ந்த மாணிக்கங்கள், இரணியனின் மார்பைப் பிளந்தபின் ரத்த வெள்ளமானது கொழித்துக் கொண்டாற்போன்று அருவிகள் போல் ஓடுகின்றன. அவ்வெள்ளத்தில் அம்மாணிக்கப்பாறைகள் பன்றிகளின் உரசலினால் உடைந்து பளபளவென மிளிர்ந்து கொண்டு அருவிகளோடு கலந்து பெருகுகின்றன என்பதாம்.

ஐந்தாம் பாடலில் அவதாரங்களுக்கு மூலமான திருப்பாற்கடலில் எம்பெருமான் கண் வளர்ந்தருளுகிறபடியை வருணிக்கிறுர்.

இப்பாடலில், மலைபோன்ற பெரிய உடம்புகளைக் கொண்ட யானைகள் தன் பேடையை மகிழ்விப்பதற்காக இனிய உணவு கொடுக்கவிரும்பும், அதனால் இளைய மூங்கில் முளைகளைப் பெயர்த்துத் தேன் வெள்ளத்தில் தோய்த்து அதன்

வாயிலே பிழிகின்றன என்று இயற்கையை வருணிக்கிறுர். இதே உவமை திருவேங்கடம லையின் இயற்கைக்கு

. . . . . . . . . . . . . . . . . .

இருக ணிளமூங்கில் வாங்கி -
அங்கிருந்த
தேன்கலந்து நீட்டுந் திருவேங்
கடங்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை.

என்ற பூதத்தாழ்வாரின் இரண் டாம் திருவந்தாதிப் (75) பாசு ரத்தைக் காஞ்சி ஸ்வாமி இங்கு எடுத்துரைப்பர்.

ஆரும் பாடலில், ஸ்ரீவைகுண் டத்தை விட்டுத் தேவர்களுக்கா கத் திருப்பாற்கடலிலே வந்து கண் வளர்ந்த எம்பெருமான் அலைகடலளவும் போகமாட் டாத மனிதர்க்கும் அனுகூல மாக, இமயமலையிலுள்ள திருப் ரிதியில் எழுந்தருளியிருப்பதாக ஆழ்வார் கூறுகிறுர். இப்பாட் டில் நறுமணமுள்ள குருக்கத் திக்கொடிகள் ஆகாயம் வெளி யடையும்படி ஓங்கிப்படர்ந்து மேகமண்டலத்தோடு போராடும் போது அந்த அடர்த்தியின் மிகு தியால் பூக்கள் அலருகின்றன; அப்பூக்களிலே பெருகும் தேனை யுண்ண நினைத்து வண்டுகள் அம்மேகத்துக்கும் கொடிகளுக்கு மிடையே நுழைந்து தேனைப் பருகிக் களித்துச் செருக்கி இசைபாடும். இப்படிப்பட்ட ஆரவாரம் கொண்டது திருப் பிரிதி என்கிறுர். மேலும்,

'மணங்கொள் மாதவி நெடுங்கொடி
விசும்புற
நிமிர்ந்தவை முகில் பற்றி'

என்ற தொடருக்கு அண்ணங் கராசாரிய ஸ்வாமி உள்ளுறை பொருள் கூறுவர். அதா வது 'மாதவிக்கொடி என்று பிராட்டியைச் சொல்லுகிறது; ... என்று எம்பெருமானைச் சொல்லுகிறது; அபராதிகளான (தவறு செய்பவர்களான) சேத நர்களை க்ஷமித்து (பொறுத்து) ரக்ஷிப்பதற்காக (காப்பதற்காக)ப் பிராட்டி எம்பெருமானோடே போராடி மன்ருடுவளிறே; அதைச்சொல்லுகிறது' என்பது. ஸாரக்ராஹிகளான (அன்னப்ப றவை போன்று ஸாரத்தை எடுத்துக்கொள்ளும்) மஹான் கள் வந்து புகுந்து தோத்தி ரம் பண்ணும்படியைச் சொல் லுகிறது 'வண்டிசை சொலும்' என்றும் தொடர் என்பதையும் எடுத்துரைப்பர் ஸ்வாமி.

ஏழாம் பாட்டில் 'தேவர்க ளும் வந்து தொழுமிடம் திருப் பிரிதி' என்கிறுர். இமயம லையின் தாழ்வரைகளிலே மேக மண்டலத்தளவும் ஓங்கி வளர்ந்த வேங்கை மரங்கள் மிக குக் கொடிகளாலே தழுவப் பெற்று நிற்கும்; வெளி நிலங் களிலே கொடிய வேங்கைப் புலிகள் திரியாநிற்கும்; இப் படி எங்கும் வேங்கை மயமா கவே யிராநின்ற இமயமலை யின் கண் தேவர்கள் வந்து செங்கழுநீர், செண்பகம், இரு வாட்சி, பாதிரி, புன்னை, குருக் கத்தி, கருமுகை, தாமரை எனப் படுகின்ற எண்வகைப் பூக்களை யும் இறைவனுக்கு அர்ப்பித்து ஆயிர நாமங்களைச் சொல்லிக் கொண்டே வணங்குமிடம் திருப் பிரிதி என்கிறுர் ஆழ்வார்.

எட்டாம்பாட்டில், சோலைக ளின் அடர்த்தியைக் குறிப்பி டுகிறுர். அடர்ந்த சோலை கள் சூழ்ந்துள்ளதனால் இம யமலையில் இருள் ... இருக்கின்றதாம்; பகற்பொழுதிற் கும் இரவுப்பொழுதிற்கும் வேற் றுமை காணமுடியாமல் பாம் புகள் பெரும்பசியோடு இரை தேடத் திரிந்து கொண்டிருக் கின்றன; அப்படிப்பட்ட இம யமலையின் கண் அமரர்கள் வந்து சேரந்து 'பரமபுருஷா' 'ஸகல ஜகத் காரணபூதா' என்று பலவாறு விளித்து நான்மு கக் கடவுளை முன்னிட்டுக் கொண்டு வணங்குமிடம் திருப் பிரிதியாகும் என்கிறுர் ஆழ் வார்.

ஒன்பதாம் பாட்டில் இறை வனின் ஆயிரநாமங்களைப் பொருட்செறிவோடு துதிப்ப வர்களுக்கு அவ்விறை வன் அருள்பாலித்துக்கொண்டி ருக்குமிடம் திருப்பிரிதி என்கி றுர் ஆழ்வார்.

'தாது மல்கிய பிண்டி
விண்டலர்கின்ற
தழல் புரையெழில் நோக்கி
பேதை வண்டுகளெரியென வெருவரு
பிரிதி சென்றடை நெஞ்சே'

இவ்வடிகளின் கருத்தாவது: தாதுக்கள் நிறைந்துள்ள அசோ கமலர்கள் மலர்ந்தால், மலரும் போதுண்டாகுமழகு நெருப்பு போன்று ஒளிமிளிர்ந்து கொண் டிருக்குமாம்; வண்டுகள் அம் மலர்களின் அழகைக் கண்டு இவை நெருப்பு என அஞ்சு மாம்; பிறகு ஆராய்ந்து அச் சத்துடன் அம்மலர்களிடம் செல் லுமாம்; இப்படியே ஒவ்வொரு நாளும் அச்சமும் அச்சங்க ழிதலுமாயிருக்குமாம்; இப்படிப் பட்ட நிலையையுடைய திருப் பிரிதியைச் சென்று சேர் என் பதாகும்.

இத்தொடரின் உட்கருத்தா வது எம்பெருமான் ஸர்வரக்ஷ கன் என்பது தெரிந்திருந்தும், 'யாரால் இவனுக்கு (இறைவ னுக்கு) தீங்கு நேருமோ' என்று அஞ்சிப் பல்லாண்டு பாடு கின்ற பிரபந்நர்கள் (மறந்தும்

புறந்தொழா மாந்தர்) வாழுமிடம் திருப்பிரிதி என்பதாம்.

இறுதிப்பாட்டில், இமயமலையில் மேகங்களின் கூட்டத்தால் விளையும் இயற்கை அழகை ஆழ்வார் வருணிக்கிறார். முழுமையாக நீரை முகந்து கொண்டு கறுதத நிறமுடைய பெரிய மேகக்கூட்டங்கள் உட்கொண்ட நீரின் கனத்தாலே பெயர்ந்து போகமுடியாமல் இருந்த இடத்தே இருந்து முழங்குகின்றன. அப்பெரு முழக்கத்தைக்கேட்டு மலைப் பாம்புகள் மேகத்தின் ஒலியையும், மிடுக்கையும், உருவின் பெருமையையும் கொண்டு இவை யானைகள் என எண்ணி அவற்றை விழுங்க நினைத்து மலைபெயருவது போலப் பெயர்ந்து அருகில் வருகின்றனவனாம்.

இப்பாட்டால் சில மலைப்பாம்புகள் யானையைப் பார்த்து அஞ்சியோடிப் போய் விடுமென்றும் பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கிவிடும் என்றும் நாம் உணர முடிகிறது.

மேலுள்ள கருத்து பழந்தமிழ் நூல்களான திரையன்பாட்டு, நற்றிணை, தேவாரம், கம்பராமாயணம் முதலானவற்றில் எடுத்தாளப்படுவதைக் காஞ்சி ஸ்வாமிகள் குறிப்பிடும்போது அவருக்குத் தமிழ் நூல்களனைத்திலும் தெளிந்த ஞானம் இருப்பதை நாம் உணரலாம்.

## முடிவுரை

இயற்கையின் அழகைப் பக்திப் பெருங்கடல்களான ஆழ்வார்கள் வாயிலாக அறிவது சாலச்சிறந்தது. அதனினும் காஞ்சி ஸ்வாமிகள் வாயிலாக இயற்கை அழகைக்காணும் போது பக்திப் பெருக்கோடு வரும் காட்சியை நாம் கண்டு இயற்கை அன்னை பவனி இன்புற்று களிக்கலாம்.



## வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) சிறப்பு பூஜை | (திங்கட்கிழமைகளில்) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்தரம், 5 பெரிய லட்டுகள், 5 வடைகள். |
| 2) அஷ்டதளபாத பத்மாராதனா சேவை : | (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு. 5 நபர்கள அனுமதிக்கப்படுவர். |
| 3) ஸகஸ்ர கலசாபிஷேகம் | (புதன்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸதரம், 7 பெரிய லட்டுகள், 7 வடைகள 5 அப்பஙகள், 5 தோசைகள், புளியோதரை, பொஙகல், சர்க்கரைப் பொஙகல, பாயசம், (ஒவ்வொன்றும 1/32 சோலா அளவு. |
| 4) திருப்பாவாடை | (வியாழக்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள அனுமதிக்கப் படுவர. அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டுகள, 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள, 5 தேன் துளைகள், புளியோதரை, பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு.) |
| 5) அபிஷேகம் | (வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு (அ) பூராபிஷேகம் : ரூ. 750/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 2 சிறிய லட்டு, 2 வடைகள். (ஆ) புனுகுப்பாத்திரம் : ரூ. 300/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. (இ) கஸ்தூரிக்கிண்ணம் : ரூ. 150/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. அன்பளிப்பு : |

குறிப்பு :

(1) வரிசை 1 முதல் 4 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே பதிவு செய்து கொள்ளலாம்.

(2) கிடைத்திடும் சீட்டுகளைப் பொறுத்து, ஒரு வருடத்திற்கு முன்பேயே அபிஷேகத்திற்கு முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படும்.

லட்டுப்படி

ஆர்ஜிதம் பெரிய லட்டு படி - ரூ. 2500/-
சிறிய லட்டு படி - ரூ. 750/-

சீட்டு வாங்கிய பக்தரைச் சார்ந்த மொத்தம் ஐந்து நபர்களுக்கு ஏழுமலையான் தரிசன வசதி செய்து தரப்படும். தரிசனத்திற்குப் பிறகு 30 லட்டுகள் வழங்கப்படும.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினோராம் அத்தியாயம்

## விச்வரூபதர்சன யோகம்

'உமைப்ரியன்'

### (ஸஞ்ஜயன் தொடர்ந்து கூறுகிறான்)

தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்
ப்ரவிபக்த மனேகதா ।
அபச்யத்தேவ தேவஸ்ய சரீரே
பாண்டவஸ்ததா ।। (13)

"அப்போது (கிருஷ்ணனின் விஸ்வரூப தரிசனத்தின்போது) பலவாறு பிரிந்துள்ள இவ்வுலகம் அனைத்தையும் பரம்பொருளின் உடலில் ஒன்றாகக்கூடி இருப்பதை பாண்டவன் (அர்ச்சுனன்) பார்த்தான்"

[புல், பூண்டு, பூச்சி முதல் யானை, சிங்கம், மனிதன் என்று இம்மண்ணில் பல வாழுகின்றன. இவை யாவும் உயிரின் பல்வகையான தோற்றங்களே. இவையாவும் வியாபித்துள்ள இப்பூமியும், வானவர் வாழும் தேவலோகமும், வானத்தில் உலாவும் கிரகங்களும் யாவும் இறைவன் உருவத்தில் காணுகின்றான் அர்ச்சுனன். அதாவது எல்லா உலகங்களையும் தன்னகத்தே ஒரே நேரத்து இறைவன் தாங்குகிறான். அந்தப் பேராற்றலை ஓர் அதிசயமாக அர்ச்சுனன் கண்டதைத் தான் பார்த்ததாக சஞ்ஜயன் கூறுகின்றான்.]

தத: ஸ விஸ்மயா விஷ்டோ
ஹ்ருஷ்ட ரோமா தனஞ்ஜய:
ப்ரணம்ய சிரஸா தேவம்
க்ருதாஞ்ஜலிரபாஷத ।। (14)

"பிறகு தனஞ்ஜயன் (அர்ச்சுனன்) மிகவும் ஆச்சர்யத்துடன், உடல் சிலிர்க்க, பகவானை தலை வணங்கி, இருகைகூப்பிப் பேச லுற்றான்."

[இறைவன் பேருருவைக் கண்டவுடன் வியப்பால் உடல் வெளிப்பாட்டு உணர்ச்சிகளுக்கு உள்ளாகின்றான் அர்ச்சுனன். ஆம் தன் கற்பனையும் மீறி, ஆற்றல்மிகு ஓர் உருவத்தைக் கண்டவுடன் தன்னை மறந்து உணர்வுகளுக்கு ஆளாகிவிடும் அர்ச்சுனன், அடுத்துத் தன் மனதில்படும் கருத்துக்களைக் கூற முற்படுகின்றான்.]

### அர்ச்சுனன் கூறுவது :

பச்யாமி தேவான்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வான்ஸ்ததா பூதவிசேஷ
ஸங்கான்
ப்ரஹ்மாண மீசம் கமலாஸனஸ்த்தம்
ருஷின்ஸ்ச ஸர்வானுரகான்ஸ்ச
திவ்யான் ।। (15)



"தேவனே! உன்னுடைய உடலில் தேவர்கள் யாவரையும், உயிரினங்கள் எல்லாவற்றையும், தாமரை மலரில் அமர்ந்திருக்கும் நான்முகனான பிரம்மனையும். எல்லா முனிவர்ளையும், தேவலோகத்து பாம்புகளையும் நான் பார்க்கிறேன்."

அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோ
அனந்த ரூபம் ।
நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர
விச்வரூப ।। (16)

"உலகத்தையே வடிவாகக் கொண்ட உலகநாதனே! கணக்கற்ற கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் ஆகியவையுடன் எல்லையற்றுத் திகழ்கின்ற உன் உருவத்தை எங்கும் பார்க்கின்றேன். மேலும் உன்னுடைய முதல், இடை, கடை எதுவுமே என்னால் பார்க்க முடியவில்லை."

[மேற்கூறிய இரண்டு செய்யுட்களின் மூலம் இறைவனின் எங்கும், எதிலும், எப்போதும் நீக்கமற நிறைந்திருக்கும் தன்மை குறிக்கப்படுகின்றது.]

கிரீடனம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராசிம் ஸர்வதோ
தீப்திமந்தம் ।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம்
ஸமந்தாத்
தீப்தானலார்கத்யுதி
மப்ரமேயம் ।। (17)

"தலையில் மகுடம் அணிந்து, கையில் கதை (ஆயுதம்) தாங்கி, கையில் சக்கரம், ஏந்தி, சுற்றிலும் ஒளிப்பிழம்பாய்த் திகழ்ந்து காண்பதற்கு அரியதாக விளங்கி, வெப்பத்தைத் தந்திடும் நெருப்புச் சூரியனாகத் திகழ்ந்திடும் உன்னை நான் எங்கும் பார்க்கின்றேன்"

[இங்குப் பேரொளியுடன் இறைவன் திகழ்ந்து, சாதாரண ஊனக்கண்ணுக்கும் மட்டுமனறி ஞானக்கண் பெற்ற அறிஞருக்குக்கூட திகைப்பூட்டும் வகையில் இறைவன் தன் விஸ்வரூபத்தைக் காட்டுகின்றான். அதாவது ஞானியராலும் அறியமுடியா அரிதான மேன்மையுடையவன் இறைவன்.]

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம்
நிதானம் ।
த்வமவ்யய: சாச்வததர்மகோப்தா
ஸனாதன ஸ்தவம் புருஷோ
மதோ மே ।। (18)

"தாங்கள் என்றும் குறையாத, அழியாத மூலப்பரம்பொருள்; முழுதும் அறிந்துகொள்ள வேண்டியவர், இந்த உலகத்தினைத் தாங்குபவர்; மாற்றம் இல்லாதவர்; இந்து தர்மத்தின் காவலர; (தாங்கள்) என்னால் அறிந்துகொள்ளத்தக்கதான பரமாத்மா எனும் பேரருளாளர்."

[எது மாறினாலும், எது அழிந்தாலும் சிறிதும் பாதிக்கப்படாத இறைவனான கண்ணன் தன்னுடைய கருணைமிக்க பேரருளின் காரணத்தால் இந்த உலகை தர்மத்தின் வழிநடத்துகின்றார். இயற்கை அவர்விருப்பப்படி நடக்கின்றது. அதுவே அப்பகவானின் ஈடு செய்யமுடியாத பெருங்குணமாகும். அதனை இங்கு அர்ச்சுனன் உணருகின்றான்]

அனாதி மத்யாந்த மனந்த வீர்ய
மனந்தபாஹும் சசி ஸூர்ய
நேத்ரம் ।
பச்யாமி த்வாம் தீப்தஹுதாச
வக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம்
தபந்தம் ।। (19)

"முதல், இடை, முடிவு இல்லாதவரும், முடிவில்லாத சக்தியை கொண்டவரும், கணக்கற்ற கைகளைத்தாங்கியவரும், சூர்ய சந்திரர்களை தன் இரு கண்களாகக் கொண்டவரும், தீ உமிழும் வாயினைப் பெற்றவரும், தன்னுடைய பேரொளியினால் இந்த உலகத்தையே சுடும் தனமையினரும் ஆகிய உன்னைப் பார்க்கின்றேன்."

[சாதாரணமாக சராசரி மனிதன் கடல், யானை, இரயில் எஞ்ஜின் ஆகியவற்றைப் பல முறை பார்த்திருந்தாலும் மீண்டும் மீண்டும் அவற்றைப் பார்ப்பதில் சலிப்பதில்லை. ஏனெனில் இயற்கை வளத்தில் கடலைவிட மிகப்பெரியது, ஆசசர்யமானது ஏதும் இருக்கமுடியாது. மிருகங்களில் யானையைவிட பெரிய மிருகம் இல்லை. அதேபோன்று இயந்திரங்களில இரயில் எஞ்ஜினைப் போன்று அந்த அளவு ஒரு குறுகிய இடத்தில் பல பாகங்களைக் கொண்டு பல இரயில் பெட்டிகளை ஒரு சேர்த்து இழுத்திடும் ஒரு இயந்திரத்தை அருகுசென்று பார்க்கத்தூண்டுவதை சாதாரணமாக பார்க்கலாம். ஆகவே இவை மூன்றும் அடிக்கடிப் பார்த்திடத் தூண்டுகின்றன. இந்த மனநிலையில்தான் வியாசர் பகவானின் குணங்களில் பல இடங்களில் பலவாறு ஆழங்கால் பட்டு அக்குணங்களையே, ஆற்றல்களையே அர்ச்சுனன் நிலையில் வைத்து நமக்குக்கூறுகிறார். அவ்வாறு கூறுவதில் அவர் சிறிதும் சலிப்பதில்லை. பகவானின் ஆற்றல்கள் பற்றி கேள்விப்படும் நம்மிடம் மேலும் நமது மனதில் கற்பனையையும் மிஞ்சிடும் வகையில், நம்மிடம் மேலும் பகவானின்

பெருமையை அறிந்திட தூண்டுகிறது. அந்த வகையில் இச்செய்யுள் மீண்டும் இறைமைக் குணங்களின் சிறப்பை அறிவிக்கின்றது.]

த்யாவா ப்ருதிவ்யோரிதமந்த்ரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன
திசஸ்ய ஸர்வா: ।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம்
மஹாத்மன் ॥ (20)

"மகாத்மாவே! விண்ணுலகு, மண்ணுலகு (இவை இரண்டுக்கும் இடைப்பட்ட அண்ட கோளங்கள், உலகங்கள் இயங்குகின்ற வெட்டவெளி, எட்டுத் திசைகள் ஆகிய யாவும் உன்னால் வியாபிக்கப்பட்டுள்ளன. உன்னுடைய வியப்பூட்டும் இந்தப் பயங்கரமான வடிவத்தைக் (விஸ்வரூபதரிசனம்) கண்டு மூன்று உலகங்களுக்கும் நடுநடுங்குகின்றன."

[அவனன்றி அணுவும் அசையாது என்பதை அர்ச்சுனன் ஐயமற அறிகின்றான். ஆக்கலும், அழித்தலும் அவ் இறைவன் விருப்பப்படிதான் நடக்கின்றன என்பதையும், தான் ஒரு கருவி மாத்ரமே என்பதையும் அறிகின்றான். அதாவது பாரதப் போர் தன் முடிவின்படி தான் நடக்கப்போகிறது என்று மயங்கிய அர்ச்சுனன், குருக்ஷேத்ரப் போரின் மூலம் அறத்தின் பெருமையை உணர்த்தவே இறைவன் இப்போரை நடத்துகிறான் என்ற தெளிவைப் பெறுகின்றான். ஆக்கலின் பயங்கரத்தையும் காட்டவே அவ் இறைவன் இப்பேருவை அருச்சுனனுக்குக் காட்டுகிறான்.]

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா
விசந்தி
கேசித்பீதா: ப்ராஞ்ஜலயோ
க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்த
ஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி:
புஷ்கலாபி: ॥ (21)

"வான் உலகத்தைச் சார்ந்தவர் யாவரும் உன்னிடம் ஒடுங்குகின்றனர். சிலர் பயந்து கைகூப்பி உன்னை வணங்குகின்றனர். மாமுனிகள், சித்தர்கள் யாவரும் வாழ்த்தி, உன் புகழ்பாடி உன்னைப் போறறுகின்றனர்."

[உலக அழிவு எனும் பணியினையும் இறைவன் தன்னுடைய ஒரு திருவிளையாடலாகவே எண்ணுகின்றான். ஏனெனின் தன்டைய ஒவ்வொரு செயலின் மூலம் ஒவ்வொரு உண்மையை புலப்படுத்துகின்றான். பக்தனைக் காப்பதற்காக, அவன் மூலமாக சத்தியத்தை தர்மத்தை நிலைநாட்ட இறைவன் கற்பனைக்கும் எட்டாத வகையில் அகிலமே நடுங்கும் வண்ணம் பயங்கரமான முடிவுகளை எடுக்கிறான். இதனை அறிந்தும், அறியாத வானவர்கள் மௌனமாக தன் பூவுலக வாழ்விற்குப் பிறகு இறைவனுடன் கலந்துவிடுகின்றனர். மற்றும் சிலரோ இறைவனின் பயங்கர முடிவினை அறிந்து அஞ்சி அவ் இறைவனையே தொழுகின்றனர். இறைவனின் எண்ணமும் அதற்கான இறைவன் கொண்ட காரணமும் அறிந்திடும் மாமுனிகள், சித்தர்கள் யாவரும் அவ் இறைவனின் திருவிளையாடலுக்கு 'மங்களாசாஸனம்' செய்திடும் வகையில், அவன் புகழ்பாடிப் போற்றுகின்றனர்.]

(தொடரும்)



## ஸர்வ தரிசனம்

திருமலைக கோயிலில் ஸர்வதரிசனம் புதன், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளைத் தவிர நாளும் காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், இரவு 8 மணியிலிருந்து இரவு 10-30 மணி வரையிலும் அல்லது கூட்டத்தைப் பொறுத்து 'ஸர்வதரிசனத்'திற்காக பொதுமக்கள் அனுமதிக்கப்படுவர். சாதாரண நாட்களின் போது ஸர்வதரிசனம் நாள் ஒன்றிற்கு $14\frac{1}{2}$ மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களின் போது நாள் ஒன்றிற்கு 18 முதல் 20 மணி நேரங்கள் வரை அனுமதிக்கப்படும்.

## விண்ணப்பம்

'ஸப்தகிரி' இதழுக்குக் கதை, கட்டுரைகள், துணுக்குகள் அனுப்புமாறு எழுத்தாளர் பெருமக்களை மேலாண்மை கேட்டுக்கோள்கிறது. பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்கு மட்டுமே சன்மானத்தொகை வழங்கப்படும்.

ஆசிரியர்.

# சித்திரை பெற்ற பேறு

காச்யபன் - திருப்பதி.

'சைத்ர: ஸ்ரீமாநயம் மாஸ:' என்கிறபடியே முதன்மைபெற்ற இந்தச் சித்திரை மாதமானது மாதங்களில் சிறப்பு பெற்றது என்பர். அந்தமிழால நற்கலைகளை ஆராய்ந்து உரைத்து ஆழ்வார்களும் அவர்களது அருளிச்செயல்களைத் தாழ்வில்லாது வளர்த்த ஆசார்யர்களும் இச்சித்திரை மாதத்தில் அவதரித்து இம்மாதத்திற்குப் பெருமை சேர்த்தனர். அவர்களது நன்னாளை ( ) என்ற குறியீட்டில் தந்து அவர்களது பெருமைகள் மிகவும் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன.

### கோயில் குமாண்டூர் இளையவில்லியாச்சான் (17-4-96)

சித்திரை மாத ரேவதி நட்சத்திரத்தில் அவதரித்த இவ்வாசாரியர் இராமாநுசரின் சிறிய தாயாரின் குமாரராவர். இராமாநுசரின் திருவடிகளில் எல்லா கைங்கர்யங்களைச் செய்து அவரால் இளையவில்லி ஆச்சான் (பாலதந்வீ) என்று திருநாமம் சாத்தப்பெற்றவர். பெரிய திருமலை நம்பிகளிடமும் அதிக ப்ரீதி கொண்டவர்.

### வடுக நம்பி (18-4-96)

ஆந்தர்பூர்ணர் என்று குலாவப்படும் இவ்வாசாரியர் கர்நாடகத்திலுள்ள சாளக்கிராமம் என்ற ஊரில் அச்வநி நட்சத்திரத்தில் பிறந்தவர். இராமாநுசரின் அந்தரங்க சீடராவர். ஆசார்ய அபிமானமே உத்தாரகம் என்ற நிஷ்டையில் இருந்து எம்பெருமானாருக்குப் பாலமுது காய்ச்சி தருவதும் திருமேனி காவலுமாய் இருந்தவர். இவர் அருளிய 'ஸ்ரீராமாநுஜ வைபவம்' என்னும் நூல் சிறப்பு வாய்ந்தது.

### உய்யக்கொண்டார் (20-4-96)

புண்டரீகாக்ஷர் என்ற இயற்பெயரையுடைய இவ்வாசாரியர் திருவெள்ளறையில் கிருத்திகை நட்சத்திரத்தில் அவதரித்தவர். நாதமுநிகளின் முக்கிய சீடராயிருந்து நாலாயிரத் திவ்ய ப்ரபந்தத்தை உலகெங்கும் பரவச் செய்யக் காரணமாயிருந்தவர். இதுபற்றியே 'உய்யக்கொண்டார்' என்ற சிறப்புப் பெயரும் பெற்று விளங்கினார்.

### எங்களாழ்வான் (21-4-96)

ஸ்ரீவிஷ்ணுசித்தர் என்ற இயற்பெயர்கொண்ட இவ்வாசாரியர் திருவெள்ளறையில்
ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தவர். ராமாநுசருக்கு உசாத்துணையாக இருந்து ஸ்ரீபாஷ்யத்தை முடித்துக் கொடுத்தவர். ஸ்ரீவிஷ்ணு புராணத்துக்கு விஷ்ணு சித்தீயம் என்ற உரையை எழுதியவர். இவர் மேதா விலாசம் கண்டு எம்பெருமானாரால் 'எங்கள் ஆழ்வானோ' என்று அபிமாநித்து அழைக்கப்பட்டவர்.

### இராமாநுசர் (23-4-96)

ஆதிசேஷனின் அம்சமான இராமாநுசர் அவதரித்தது சித்திரையில் செய்ய திருவாதிரை. ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்தவர். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தை உலகுக்கு உணர்த்தி வளர்த்தவர். 'எம்பெருமானார் தர்சனம்' என்றே திருவரங்கத்து நம்பெருமாள் பேரிட்டு வைத்தார். "(திருமலை) அப்பனுக்கு சங்காழி அளித்தருளும் பெருமாள்" என்று போற்றும் பெருமைபெற்றவர். நாற்றிசையும் கொண்டாடும் நாளில் அவதரித்த இவரது வைபவம் வாசாமகோசரம். சொலப்புகில் வாயமுதம் பரக்கும். தமிழ்மறையை மொய்ம்பால் வளர்த்த இதத் தாயாவர்.

### ஆட்கொண்டவில்லி சீயர் (23-4-96)

எம்பெருமானாரின் சீடர்களில் ஒருவரான இவ்வாசாரியர் திருவாதிரை நாளில் அவதரித்தார். ஞானம் வைராக்யம் நிரம்பப் பெற்று சந்நியாசி ஆச்ரமத்துக்குத் தலைவராய் விளங்கியவர். இவரது வார்த்தைகள் பொன்னேபோல் போற்றத்தக்கன.

### முதலியாண்டான் (24-4-96)

சித்திரைப் புனர்வசுவில் பாஞ்சஜன்யத்தின் அம்சமாகப் பூவிருந்தவல்லியிலுள்ள வரதராஜபுரத்தில் அவதரித்த இவ்வாசாரியர் தாசரதீ என்ற இயற்பெயர்கொண்டவர். எம்பெருமானாரின் மருமகனாவர். எம்பெருமானாருடைய சிஷ்யர்கள் அனைவருக்கும் நிர்வாககராயிருந்தமையாலே இவர் 'முதலியாண்டான்' என்றே அழைக்கப்பெற்றார். எம்பெருமானார் இவரைத் தமது த்ரிதண்டமாக அபிமாநித்தார். எம்பெருமானா

ருடைய திருவடிநிலை இன்றள வும் முதலியாண்டான் என்றே எங்கும் அழைக்கப்படுகிறது.

### கிடாம்பி ஆச்சான் (1-5-96)

சித்திரை அஸ்தத்தில் அவத ரித்த கிடாம்பி ஆச்சான் எம் பெருமானாருக்கு மடைப்பள்ளி கைங்கர்யம் செய்யப்பெற்றவரா வர். இராமாநுசர் இயற்றிய ஸ்ரீபாஷ்யத்தை சரஸ்வதிதே வியிடம் காட்டிவிட்டுத் திரும் பும் போது திருமலையப்பனை வணங்கி, ஓர் இடைச்சிக்குப் பரமபதம் அளித்த பெருமை இவ ருக்கு உண்டு. இராமாநுசரால் 'வேதாந்தோதயநர்' என்ற திரு நாமம் பெற்றவர்.

### மதுரகவியாழ்வார் (2-5-96)

சித்திரையில் சித்திரை நன் னாளில் அவதரித்த மதுர கவியாழ்வார் குமுதன் என் னும் நித்ய சூரியின் அம்ச மாவார். திருக்கோளூரில் அவத ரித்த செல்வரான இவர் வேதம் தமிழ் செய்த நம்மாழ்வாரின் சீடராய், தேவு மற்றறியாதவ ராய் இருந்தவர். அவரது பிர பந்தங்களை மதுரமாகப் பாடு வது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டவர். திருமந்திரத்தின் நடுப்பதமான நம பதத்தின் பொருளை உணர்த்தும் 'கண்ணி நுண்சிறுத்தாம்பு' என்ற ப்ரபந் தத்தை அருளியவர்.

### திருமலை அனந்தாழ்வான் (2-5-96)

மதுரகவி நிஷ்டரான அனந் தன் என்ற இயற்பெயரையு டைய இவ்வாசாரியர் கர் நாடகத்திலுள்ள சிறுபுத்தூரில் சித்திரை நன்னாளில் அவதரித் தவர். இவர் ஆதிசேஷனின் அம்சமாவர். அருளாளப்பெரு மான் எம்பெருமானாரை ஆச்ர யித்து, பின்பு எம்பெருமானா ரின் நியமனப்படி உலகமுண் டபெருவாயனான திருவேங்கட வனுக்கு புஷ்பகைங்கர்யம் செய்து வந்தவர். திருமலை யில் இராமாநுச விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய்தவர. 'கோதா சதுச்லோகீ' 'இராமாநுஜ சதுச் லோகீ' என்ற துதி நூல்களை இயற்றியவர். திருமலையில் இராமாநுசர் திருவடியை 'அனந தாழ்வான்' என்று அழைப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### நடாதூர் அம்மாள் (2-5-96)

எம்பெருமானாருடைய மருமக னாரான நடாதூர் ஆழ்வானின் திருப்பேரன் ஆவர் இவ்வாசாரி யர். சித்திரைநாளில் அவதரித்த இவர் காஞ்சியில் வாழ்ந்து கொண்டு ஸ்ரீவத்ஸ குலத் துக்கு ஆபரணமாகத் திகழ்ந்த வர். ஸ்ரீபாஷ்யத்தைப் பலத டவை காலக்ஷேபம் ஸாதித்த வர். சுதர்சனபட்டர் என்பவர் இவரது முக்கிய சீடராவர்.

இவ்வாறு ஆழ்வார் ஆசார் யர்கள் சீர்மைமிகுந்த சித்திரை மாதத்தில் பிறந்ததுமட்டு மின்றி, அர்ச்சாமூர்த்திகளான ஸ்ரீரங்கநாதனான நம்பெருமா ளும், காஞ்சீதேவப்பெருமாளான வரதராஜரும், மற்றும் த்ரேதா யுக தெய்வமான சக்கரவர்த்தி திருமகனும் முறையே ரேவதி, அஸ்தம், புனர்வசு ஆகிய நட் சத்திரங்களில் ஆவிர்ப்பவித்து முப்புரியூட்டும் வகையில் இம் மாதம் பேறு பெற்றது தனிச்சி றப்பாகும். இம்மாதத்தில் மேற் குறித்த நாட்களில் அவரவர் தம் துதிநூல்களைக் கொண்டு வாயார வாழ்த்தி வணங்கு வோமாக.



## நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ் தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண் டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசீய மயமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம் திருப்பதி" என்ற பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப் பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித் தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும் பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விருமபுவர் முதலாண்டுககான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் ஸ்ரீகபி லேஸ்வரசுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலை யிலிலும், மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகின்றது.





# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

**(FREE HOME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"

வணக்கம்

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர் - பெயர- முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அனபர்கள், கடந்த 15 வருடங்களாக அளித்து வரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 75 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி, அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணிக்க உத்தேசித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வையற்ற குழைந்தைகளுக்கு தினந்தோறு மூன்று வேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒரு நாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் ஸ்ரீ ஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G) vide Hqrs. No. 1 (118) VJA/95-96. Valid upto 31-3-98.

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE, என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்." - ஸ்வாமி விவேகானந்தா.

**நாராயண ஸேவையில்**

**K.S. ஆசார்யா**

**Founder / President**

நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

ஸ்ரீமான். உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாச்சாரியர் - திருப்பதி.

ஈஷத்ப்ரபுல்லஸரஸீருஹ நாரிகேள
பூகத்ருமாதிஸு மநோஹர
பாலிகாநாம் ।
ஆவாதி மந்தமநில: ஸஹ
திவ்யகந்தை:
சேஷாத்ரிசேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (7)

(ப) ஈஷத் ப்ரபுல்ல ஸரஸீருஹ = சிறிது மலர்ந்த தாமரை மலர்களுடையவும், நாரிகேள பூகத்ருமாதி = தென்னை பாக்கு முதலிய மரங்களின், ஸுமநோஹர பாலிகாநாம் = அழகிய பாளைகளுடையவும், திவ்ய கந்தை: ஸஹ = உயர்ந்த பரிமளங்களுடன், அநில: = காற்றானது, மந்தம் = மெல்ல, ஆவாதி = வீசுகின்றது. சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(க) திருமலைநாதனே! காலைக் காற்று தாமரை மலர்களிலிருந்தும் தென்னை பாக்குப் பாளைகளிலிருந்தும் நறுமணத்தை அள்ளிக்கொண்டு வந்து வீசுகின்றது. உனக்கிது நல்விடிவாகுக.



(வி) பாலிகா = பாளை. இச்சொல் இப்பொருளில் இப்போது நிகண்டுக்களில் கிடைக்கவில்லை. இதற்கு இங்கு இதுவே பொருள் என்பது 'பைம்பொழிற்கமுகின் மடலிடைக் கீறி வண்பாளைகள் நாற வைகறை கூர்ந்தது மாருத மிதுவோ' என்று தொண்டரடிப்பொடிகள் திருப்பள்ளி யெழுச்சியில் அருள்வதனால் அறியத்தகும். சிலர் - பாலிகை போலிருத்தலால் பாலிகை என்று பாளையைச் சொல்லலாம். கமுகு முதலியவற்றின் பாளை கல்யாண ஸமயங்களில் நவதான்யங்களைச் சிறுமண்கலங்களில் இட்டுப் பிறகு அது முளைத்த பாலிகை போலிருத்தலால் என்பர்.

நன்றாக மலர்ந்து விட்டால் மணம் போய்விடுமாகையால் சிறிது மலர்ந்த என்றார். திருமலையிலுள்ள மரம் செடிகொடிகளெல்லாம் அப்ராக்ருதமென்று புராணம் கூறுதலால் வெறுமனே கந்தமென்னாமல் திவ்ய கந்தை: எனப்பட்டது. அப்ராக்ருதமான மணமென்க.

உந்மீல்ய நேத்ரயுக முத்தம
பஞ்ஜரஸ்தா:
பாத்ராவசிஷ்ட கதளீபல பாயஸாநி ।
புக்த்வா ஸலீலமத கேளிசுகா:
படந்தி
சேஷாத்ரி சேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (8)

(ப) உத்தம பஞ்ஜரஸ்தா:- உயர்ந்த கூடுகளில் இருக்கிற, கேளிசுகா: = விளையாட்டுக்காக வளர்க்கப்படுகின்ற கிளிகள், நேத்ரயுகம் = இரண்டு கண்களையும், உந்மீல்ய = திறந்து கொண்டு, பாத்ர அவ

சிஷ்ட = (நீ அமுது செய்த) கலங்களில் மிச்சமாயுள்ள, கத ளீபல பாயஸாதி = வாழைப் பழங்களையும், பாயஸத்தையும் புக்த்வா = உண்டு, அத = பிறகு ஸலீலம் = இன்பமாக, படந்தி = பேசுகின்றன, சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(க) திருமலை நாதனே உன்கோயிலில் வளர்க்கப்படும் விளையாட்டுக் கிளிகள் நீ இரவில் அமுது செய்து மிச்சமான வாழைப் பழங்களையும் பாயஸத்தையும் உட்கொண்டு உன் திருநாமங்களைச் சொல்லுகின்றன. உனக்கிது நல்விடிவாகுக.

(வி) உத்தம பஞ்சரம்- உயர்ந்த கூடு. உயர்த்தியாவது பொற்கம்பிகளால் அமைக்கப் பெற்று மணிகளும் அழுத்தப் பெற்று அழகாக இருக்கை, சுகா: படந்தி - கிளிகள் படிக்கின்றன. எதை என்றால் திருநாமங்களை என்று ஒரு சொல் வருவித்துக் கொள்க. கூட்டிலிருந்து கிளியெப்போதும் கோவிந்தா, கோவிந்தா என்றழைக்கும்' (நாச்சி 12-9) என்றுளிறே ஆண்டாள். (கிளிக்கூடுகள் பொன்வேய்ந்தும் மணிகளிழைக்கப்பட்டும் இருக்குமோ என்னில் 'அலர்மேல்மங்கையுறைமார்பன்' (திருவாய் 6-10-10) என்றும், 'திருவேங்கடத் துறை செல்வன்' (பெரியதிரு 1-8-10) என்றும் ஆழ்வார்கள் மங்களாசாஸனம் பெற்றபிறகு திருமலையப்பனுக்கு ஆகாததொன்றில்லையிறே.

ஸ்ரீரங்கத்தில் கிளிமண்டபம் போன்று திருமலையிலும் கிளி மண்டபம் இருந்து அங்கு, ரங்க ரங்கா, காவேரிரங்கா, கஸ்தூரி ரங்கா என்றழைப்பது போல இங்கும் கோவிந்தா கோவிந்தா என்று அழைத்தனபோலும்.

பாயஸம்-பால் சேர்ந்த அன்னமன்று. பாலில் பக்வமான அன்னம். 'பயஸி ஸம்ஸ்க்ருதம் பாயஸம்' என்னும் வ்யுத்பத்தியின்படி பாலை உலைநீராக வைத்துச் சமைக்கப்பட்ட திருக்கன்னலமுது என்பது தேர்ந்த பொருள். இயற்கையாகவே இனிமையாகப் பேசும் கிளிகள் பாயஸமுண்டால் படிக்கக் கேட்க வேண்டுமோ என்றபடி.

தந்த்ரீப்ரகர்ஷ மதுரஸ்வநயா
விபஞ்ச்யா,
காயத்யநந்தசரிதம்
தவ நாரதோऽபி ।
பாஷாஸமக்ரமஸக்ருத்கர சாரரம்யம்,
சேஷாத்ரி சேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (9)

(ப) நாரத: அபி-நாரதரும், பாஷா ஸமக்ரம்-ஸம்ஸ்க்ருத பாஷாமயமான, தவ அனந்த சரிதம் - உனது எல்லையில்லாத வீர சரிதத்தை, தந்த்ரீ ப்ரகர்ஷ - கம்பிகளை இழுத்துக் கட்டியதனால், மதுரஸ்வநயா - இனிய இசையை உடைய, விபஞ்ச்யா - ஏழு தந்தி வீணையோடு, அஸக்ருத் கரசார ரம்யம் - அடிக்கடிக் கைகளைத் தந்திகளில் தடவுதலினால் அழகாக இருக்கும்படி, காயதி - பாடுகிறார். சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(ச) நாரத முனிவர் வீணையைக் கையால் தடவி மீட்டிக் கொண்டே உன் சரிதங்களை வாயினாலும் பாடுகிறார், திருமலையணியரசே உனக்கிது நல் விடிவாகுக.

(வி) 'தும்புரு நாரதர் புகுந்தனரிவரோ' (திருப்பள்ளி 8) என்பதன் விவரணம் இந்தச்லோகம். 'கல்வி வாயுமே' (திருவாய் 1-10-11) வித்யை கைங்கர்யமாகிய பயனைத் தரும் என்று கல்விக்குப் பயன் கைங்கர்யமாகையால் நாரதபகவான் தமது ஸங்கீத ஸாஹித்ய ஜ்ஞானமும் வீணைவல்லமையும் பகவத் கைங்கர்யத்துக்கு உடலாக வேணுமென்று கருதி ஸம்ஸ்க்ருத பாஷாமயமான பகவத் கீர்த்தனைகளை வீணையுடன் சேர்த்துப் பாடுகிறார். ஸங்கீத வித்வான்கள் தமது ஆற்றலைக் காட்டி அரசனிடம் பரிசு பெறுவது போல் பரிசு பெறுவதற்காக அல்ல. இயற்கையிலேயே இவர் ஆசையற்றவராகையாலும் ஸகலகலா வல்லவனான திருவேங்கடவனிடம் தமது அளவுபட்ட ஆற்றலைக் காட்ட நினைக்கமாட்டாராகையாலும் அது பொருந்தாது. "......மதுசூதனன் வாயிற்குழலினோசை செவியைப் பற்றி வாங்க நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம் வீணை மறந்து' (பெரியாழ்வார் 3-6-5) என்று இவர்கள் பட்டபாடுகளை ஆழ்வார் அருளிச் செய்தது கொண்டு அறியலாகும்.

வீணைகளின் நரம்புகளை இழுத்துக் கட்டாவிடில் அபஸ்வரம் பேசுமாகையால் ப்ரகர்ஷ என்றார். இழுத்துக் கட்டல் அதன் பொருள். நாரம் த்யதி = மனிதனுடைய அறியாமையை அறுக்கிறார். நாரம் ததாதி = அறிவைத்தருகிறார். இது நாரத சப்தார்த்தம். ஸ்ரீமந் நாராயணனைப் பாடிக்கொண்டே சென்று அவரவர்களுக்கு அப்பெருமானைப் பற்றிய அறியாமையை அகற்றி அறிவை உண்டு பண்ணுகிறாராகையால் நாரதரென்பது இவருக்குக் காரணப்பெயர்.

ப்ருங்காவளீச மகரந்தரஸாநுவித்த-
ஜங்காரகீதநிநதை: ஸஹ ஸேவநாய,
நிர்யாத்யுபாந்த ஸரஸீகமலோதரேப்ய: ।

சேஷாத்ரிசேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (10)

(ப) ப்ருங்க ஆவளீச = வண்டுகளின் வரிசையும், மகரந்த ரஸ அநுவித்த = தேன் குடித்த ஆனந்தத்தோடு கலந்த, ஐங்கார கீத நிநதை: ஸஹ = ஐங்காரமென்னும் பாட்டொலியோடு கூட, உபாந்த ஸரஸீ = அருகிலுள்ள குளங்களிலுள்ள, கமல உதரேப்ய: = தாமரை மலர்களின் உட்புறங்களிலிருந்து, ஸேவநாய = உன்னைச் சேவிப்பதற்காக, நிர்யாதி = வெளிக்கிளம்புகின்றது சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(க) திருமலை நாதா அருகிலுள்ள தடங்களில் பூத்த தாமரை மலர்களில் தேனைக் குடித்து ஆனந்தம் மிக்க வண்டுகள், ரீங்காரம் செய்து கொண்டே உன்னைத் தொழ வேண்டுமென்று வரிசை வரிசையாக வெளிக்கிளம்புகின்றன. உனக்கிது நல்விடிவாகுக.

(வி) வண்டுகள் தடாகத்தாமரைத் தேனைக் குடித்து அதை விட உயர்ந்த தேனாகிய எம்பெருமானைக் கண்ணால் பருகுவதற்கு நாரதரைப் போல் பாடிக் கொண்டு வருகின்றனவாம். வண்டுகளுக்கு பகவானைப் பற்றிய ஞானம் உண்டா வென்னவேண்டா. திருமலையை அடைந்த மாத்திரத்தாலேயே திர்யக்குக்களுக்கும் ஞானோதயமாகுமென்க. (வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்றெப் பொழுதும் கை நீட்டும் யானையை - நான் 46) என்று திருமழிசைப் பிரான் அருளிச் செய்தாரிறே.

இனி உள்ளுறையில் வந்தால் 'சேமமுடைநாரதர் முனிவாஹனர் தம்பிரான்மார் போல் வாரை வண்டு தும்பியென்னும் (ஆசார்ய ஹ்ருதயம் 152) என்கிறபடி வண்டுகள் என்று, முற்கூறிய நாரதர் போன்று ஸாரக்ராஹிகளாய்த் தமக்குப் பக்கத்தில் நிற்கும் ஆசாரியரான மணவாள மாமுனிகள் தொடக்கமான மகான்களைச் சொல்லி, மகரந்த இத்யாதியாலே அவர்கள் தம்முள்ளத்துள் ஊறிய தேனாகிய எம்பெருமானை முதல் நாளிரவு முதலாக விடியும்வரை அனுபவித்த ஆனந்தத்தோடு சேர்ந்த ரீங்காரவொலி போன்ற ஹரிஹரி என்னும் பாட்டுக்களைப் பாடியதைக் கூறி, உபாந்த ஸரஸீ கமலோதரேப்ய: என்று பக்கத்திலுள்ள ஸ்வாமி புஷ்கரிணீ முதலிய குளங்களிலுள்ள தீர்த்தங்களின் நடுவைக்குறிப்பிட்டு, ஸேவநம் என்று 'தேனே திருவேங்கடமாமலைமேய கோனே' (பெரிய திரு 1-10-7) என்று வெளியில் தென்படுகிற திருமலையப்பனாகிய தேனைப் பருகுவதைச் சொல்லி, அடியேனுடைய ஆசார்யரான மணவாளமாமுனிகள் போல்வார் இதுவரையில் அந்தர்யாமியை அனுபவித்துப் பாடிக்கொண்டு சென்று குளத்தில் நீராடி அங்கிருந்து உன்னைச் சேவிப்பதற்காகப் புறப்பட்டு எழுந்தருளுகின்றனர்'' என்ற கருத்தும் பொருந்தும். இக்கருத்தில் கமலம் என்பது 'ஸலிலம் கமலம் ஜலம்' என்ற அமரகோசத்தின் படி நீர் என்னும் பொருள்படும்.

யோஷாக்ணேந வரதத்நி
விமத்யமாநே,
கோஷாலயேஷு ததிமந்த்ந
தீவ்ரகோஷா: ।
ரோஷாத் கலிம் வித்ததே
ககுப:சகும்பா:,
சேஷாத்ரி சேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (11)

(ப) கோஷ ஆலயேஷு = இடைச்சேரி வீடுகளில், யோஷாகணேந = பெண்களின் கூட்டத்தினால், வரதத்நி = உயர்ந்த தயிர், விமத்யமாநே ஸதி = கடையப்படும் போது, ததி மந்தந தீவ்ர கோஷா: = தயிரைக் கடைதலினாலுண்டான மிக்க ஒலியையுடைய, கும்பா: = தயிர்த்தாழிகளும், ககுப: ச = திசைகளும், ரோஷாத் = கோபத்தினால், கலிம் விதத்தே = சண்டையிடுகின்றன (போலுள்ளன), சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(க) இடைப்பெண்கள் தம் வீடுகளில் தயிர் கடைகின்ற பேரொலி திசைகளில் எதிரொலிக்க, தயிர்த்தாழிகளும் திசைகளும் ஒன்றுக்கொன்று கோபத்தினால் வாய்ப்போர் புரிவன போல் தோன்றுகின்றன. திருமலையரசே உனக்கிது நல்விடிவாகுக.

(வி) இந்த ச்லோகம் 'வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால் ஓசைபடுத்த தயிரரவம்' (திருப்பாவை-7) என்றதையும், 'உத்காயதீநாம் (ஸ்ரீபாக 10-46-47) என்ற ச்லோகத்தையும் அடியொற்றி அருளிச் செய்யப்பட்டதாகும். தயிர் கடைகிற ஒலி தாழிகளிலிருந்து புறப்பட்டுத் திக்குகளில் எதிர் ஒலித்து இங்ஙனம் இரண்டும் ஒன்றுக்கொன்று வாதம் புரிவது - பல்லன் பல்லாக்ஷன் என்னும் அன்னப்பறவைகள் இரண்டு விவாதித்து ஜாச்ருதிக்கு வேதாந்த ஜ்ஞாநம் ஸம்பாதித்துக் கொள்ளும்படி அறிவூட்டியது போல், மேலுலகத்திலிருக்கும் இந்த்ராதி தேவர்களுக்கு அறிவுண்டாக்குகிறது. அதாவது பரமபதநாதன் திருவேங்கடமுடையானாக அவதரித்து அவனது வாத்ஸல்

யாதி குணங்களைக் கொள்ளை கொள்ளையாக இங்கு அனைவரும் அனுபவியாநிற்க உங்களுக்கு உயர என்ன வேலை? விரைவில் இறங்கி அனுபவிக்க வாருங்கள் என்று அறிவூட்டுகின்றது என்றபடி. இப்பொருள் இச் ச்லோகத்திலுள்ள சகாரத்தை 'விதததே' என்றதனோடு கூட்டி, இங்குக் கூறப்படாத அறிவூட்டுதல் என்னும் க்ரியையையும் (சகாரம்) ஸமுச்சயிக்கின்றதாகக் கொண்டு கூறப்பட்டதாகும்.

பத்மேசமித்ர சதபத்ரகதாளிவர்க்கா:
ஹர்த்தும் ச்ரியம் குவலயஸ்ய
நிஜாங்கலக்ஷ்ம்யா ।
பேரீநிநாதமிவ பிப்ரதி தீவ்ரநாதம்,
சேஷாத்ரிசேகரவிபோ
தவ ஸுப்ரபாதம் ।। (12)

(ப) பத்மேச மித்ர = சூரியனோடு நேசம் கொண்ட, சதபத்ர கத = தாமரை மலரையடைந்த, அளி வர்க்கா: = வண்டுகளின் கூட்டங்கள், நிஜ அங்க லக்ஷ்ம்யா = தமது மேனியின் சோபையினால், குவலயஸ்ய = குவளை மலரினுடைய, ச்ரியம் = மேனியழகை, ஹர்த்தும் = போக்குவதற்கு, பேரீநிநாதம் இவ = பேரியின் முழக்கமோ இது என்னும் படி, தீவ்ர நாதம் = பெரிய ஒலியை, பிப்ரதி = வகிக்கின்றன. சேஷாத்ரி - ஸுப்ரபாதம்.

(க) திருமலை நாதனே! வண்டுகள் தமது கறுத்த மேனியழகினால் குவளைமலரின் கறுத்த அழகை வெல்லுவதற்காகச் செய்யப்படும் பேரீநாதமோ என்னலாம்படி ரீங்காரம் செய்கின்றன. உனக்கிது நல்விடிவாகுக.

(வி) பத்மேசமித்ர என்னும் தாமரை மலரின் அடைமொழி சூரியனுக்குச் சிநேகிதனான, அல்லது சூரியனைச் சிநேகிதனாகக் கொண்ட என்னும் பொருள் தந்து சூரியனால் மலர்த்தப்பட்ட என்ற கருத்தைப் புலப்படுத்தியது. போது விடிந்ததென்று தெரியப்படுத்துவதில் இதற்கு நோக்கம். சதபத்ரம் = நூறிதழ்கள் கொண்ட ஒரு சாதித் தாமரைமலர். ஸஹஸ்ரபத்ரமென்று ஆயிரவிதழ்த்தாமரை மலருமுண்டு. இயற்கையான ரீங்காரம், போரில் உண்டாகும் பேரிகையின் முழக்கமாக உத்ப்ரேக்ஷிக்கப்பட்டது. வண்டுகள் தமது சேனையாகிய தமது மேனியின் சோபையைக் கொண்டு குவலயத்தின் சேனையாகிய அதன் மேனியழகை ரீங்காரமாகிய பேரீநாதம் செய்து வெல்லுகின்றதென்றபடி.

(தொடரும்)

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## ஆர்ஜித சேவை விவரங்கள்

## தினசரி சேவைகள்

| சேவை | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப்படும் நபர்கள் எண்ணிக்கை | அனுமதிக்கப்படும் நேரம் (மாறக்கூடியது) |
|---|---|---|---|
| 1. சுப்ரபாத தரிசனம் | 100/- | 1 | காலை 2-30 மணி |
| 2. தோமால சேவை | 200/- | 1 | காலை 3-30 மணி |
| 3. அர்ச்சனை | 200/- | 1 | காலை 4-30 மணி |
| 4. தோமால சேவை மற்றும் அர்ச்சனை (வெள்ளிக் கிழமைகளில) | 400/- | 1 | காலை 6-30 மணி |
| 5. அமந்த்ரணோத்ஸவம் | | | |
| வெள்ளிக்கிழமைகளில | 600/- | 1 | காலை 6-30 மணி |
| மற்றைய நாட்களில் | 600/- | 1 | காலை 3-30 மணி |
| 6. நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைதோறும்) | 100/- | 1 | காலை 5-30 மணி |
| 7. சிறப்பு நுழைவு சீட்டு | 30/- | 1 | சர்வ தரிசன அனுமதியின போது |
| 8. ஏகாந்த சேவை | 100/- | 1 | இரவு 10-30 மணிக்குப்பிறகு |

குறிப்பு:-

1) வரிசை எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்துகொள்ளலாம்.
2) சிறப்பு நுழைவு மற்றும் ஏகாந்த சேவை சீட்டுக்களுக்கு முன்பதிவு கிடையாது.
3) ஏகாந்த சேவைகளுக்கான சீட்டுகள் ஸர்வ தரிசனத்திற்குப் பிறகு இரவு 10-30 மணிக்குமேல, ஒதுக்கப்படும் சீட்டுக்களைப் பொறுத்து விற்கப்படும்.

# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.



பத்மநாபோऽரவிந்தாக்ஷோ
பத்மகர்ப்ப: சரீரப்ருத் ।
மஹர்த்தி ரித்தோ வ்ருத்தாத்மோ
மஹோக்ஷோ கருடத்வஜ: ।।

**348.** பத்மநாப: ம்ருதுவான ஆஸநபத்மத்தில் இருப்பவன்.

தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை (4-5-8)

[தண் தாமரை - குளிர்ந்து, கண்ணுக்கு இனிய தாமரை.]

**349.** அரவிந்தாக்ஷ : செந்தாமரை போல் திருக்கண்கள் உடையவன்.

கண்ணும் செந்தாமரை (தி.விரு. 43)

**350.** பத்மகர்ப்ப : உபாஸகர் களது மனமாகிய தாமரையில் இருப்பவன்.

கோயில் கொண்டான் என்நெஞ்சம் (8-6-5)

**351.** சரீரப்ருத் : இவ்வாறு இருந்து கொண்டு, தனக்குச் சரீரமான இந்த உபாஸகர்களை போஷிப்பவன்.

இருப்பேன் என்று, என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-6)

## 13.3 செல்வம்

**352.** மஹர்த்தி : பக்தர்களது யோக க்ஷேமங்களைக் குறைவில்லாமல் நடத்துவதற்காக அபாரமான செல்வம் உடையவன்.

அனைத்துலகமுடைய அரவிந்தலோசனனை (6-7-10)

**353.** ருத்த : யாவற்றாலும் நிறைவு உடையவன்.

முட்டில் பல்போகத்து, ஒரு தனிநாயகன் (3-10-3)

[முட்டு - தடை]

**354.** *வ்ருத்தாத்மா* **:** இவ்வாறான மகிமையாலே சிறந்த ஆத்மஸ்வரூபன்.

*கூறுதல் ஒன்று ஆராக் குடக்கூத்த*
*அம்மானை* (2-5-11)
*இனிநின் பெருமை யான் உரைப்பது என்னே!*
(பெ.திரு. 71)

**355.** *மஹாக்ஷ* **:** கருடனைச் சிறந்த வாகனமாக உடையவன்.

*ஊரும் புள் (புள் ஊரும்)* (10-2-3)

*புள்ளூர்தி* (2-2-10)

**356.** *கருடத்வஜ* **:** கருடனைக் கொடியில் கொண்டவன்.

*நிறைபுகழ் அஞ்சிறைப்புள்ளின்*
*கொடியான்* (9-4-10)

[கொடியான் - கொடி உடையவன்]

*அதுல: சரபோ பீம:*
*ஸர்வஜ்ஞோ ஹவிர் ஹரி: ।*
*ஸர்வலக்ஷண - லக்ஷண்யோ*
*லக்ஷ்மீவாந் ஸமிதிஞ்ஜய: ।। 39 ।।*

**357.** *அதுல* **:** இதனால் தனக்கு ஒப்பு இல்லாதவன்.

*தன் ஒப்பார் இல் அப்பன்* (6-3-9)

**358.** *சரப* **:** அறநெறியை மீறியவர்களை தண்டிப்பவன்.

*நலியும் நரகனை விட்டிற்றும்* (தி.விரு. 78)

**359.** *பீம* **:** ஆதலால் இவர்களுக்கு பயங்கரமானவன்.

*குதற்றுவல் அசுரர் கூற்றம்* (10-1-6)

[குதற்று-மிடுக்குகள் செய்யும், வல்-வலியையுடைய]

**360.** *ஸமயஜ்ஞ* **:** அடியார்க்கு அருள் செய்வதற்கான காலத்தை அறிந்தவன்.

*அங்கு, அப்பொழுதே அவன் வீயத்*
*தோன்றிய என் சிங்கப்பிரான்* (2-8-9)

**361.** *ஹவிர் ஹரி* **:** வேள்வியில் ஹவிஸ்ஸை மிகவும் விரும்பி ஏற்றுக்கொள்பவன்; இடையூறுகளைப் போக்குபவன்.

**362.** *ஸர்வலக்ஷண லக்ஷண்ய* **:** லக்ஷ்மி எப்போதும் அணைவதால் நலங்கள் யாவும் வாய்ந்தவன் என்று அறியத்தக்கவன்.

*மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல்*
*அடிகள்* (1-3-1)

**363.** *லக்ஷ்மீவாந்* **:** எப்போதும் லக்ஷ்மியோடு இருப்பவன்.

*மணிமாமை நறையில்லா மலர் மாதர்*
*உறை மார்பன்* (4-8-2)

**364.** *ஸ்மிதிஞ்ஜய* **:** பிராட்டியின் அருளாலே ஜீவர்களைத் தனக்காக்கிக் கொள்பவன்.

*நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும்*
*இன்பனை* (4-5-3)

*விக்ஷரோ ரோஹிதோ மார்கோ*
*ஹேதுர் தாமோதரஸ் ஸஹ: ।*
*மஹீதரோ மஹாபாகோ*
*வேகவா நமிதாசந: ।। 40 ।।*

**365.** *விக்ஷர* **:** ஆதலால் ஜீவர்களிடம் அளவிலா அன்புடையவன்.

*அல்லும் நன்பகலும் இடைவீடின்றி*
*நல்கி, என்னை விடான் நம்பி நம்பியே*

**366.** *ரோஹித* **:** பிராட்டி திருமார்பில் உறைவதால் சிவந்த திருமேனி உடையவன்.

*செய்ய கமல மார்பும்* (8-4-7)

[செய்ய - சிவந்த]

**367.** *மார்க* **:** தமது விருப்பம் நிறைவேறுவதற்காக உபாஸகர்களால் தேடப்பெறுபவன்.

*என்திருமகள்சேர் மார்பனே என்னும்*
*என்னுடைய ஆவியே!* (7-2-9)

**368.** *ஹேது* **:** இவர்களது விருப்பம் நிறைவேறக் காரணமாக இருப்பவன்.

*புகல் ஒன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ்*
*அமர்ந்து புகுந்தேனே* (6-10-10)

**369. தாமோதர :** யசோதையால் தாம் பால் கட்டப்பட்ட திருவயிறு உடையவன்; உலகங்களைத் தன் வயிற்றுள் ஒடுக்கியவன்.

வெண்ணெய் களவினில் உரவிடை
ஆப் புண்டு (1-3-1)
வையகம் உண்ட பெருவயிற்றனெனை
(தி.விரு. 91)

**370. ஸஹ :** (யசோதைப் பிராட்டி போல்வார்) தன்னைக் கட்டி அடித்தாலும் பொறுத்துக்கொண்டிருப்பவன்.

எத்திறம்! உரலினோடு இணைந்திருந்து
ஏங்கிய எளிவே! (1-3-1)
வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சி வன் தாம்பு-
களால் புடைக்க அலந்தானை (தி.விரு.86)

[அலந்தான்-துன்பம் பொறுத்துக்கொண் டிருந்தான்.]

**371. மஹீதர :** பூமியின் பாரத்தைத் தீர்ப்பதால், அதை நிலைநிறுத்தியவன்.

மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்
பிறந்தான் (9-1-10)

**372. மஹாபாக :** எல்லையில்லாத ஸௌபாக்யம் வாய்ந்தவன். ஆய்ப்பாடிப் பெண்கள், நப்பின்னை, திவ்ய கன்னிகைகள் பதிநாறாமாயிரவர், ருக்மிணி, ஸத்யபாமா, ஜாம்பவதி இவர்கள்தாமே வலித்து வரிக்கத் தக்க வடிவழகுடையவன்.

தேவிமாராவார் திருமகள், பூமி ஏவ, மற்றமரர்

ஆட்செய்வார் - மேவிய உலகம்
மூன்றவை ஆட்சி (8-1-1)

**373. வேகவாந் :** அவதரித்துக் குழந்தைப் பருவத்திலும், தனது பரம சக்தியின் வேகம் குறையாமல் விளங்கியவன்.

ஆய்க்குலம் புக்கதும் (6-4-6)
கஞ்சனைத் துஞ்ச வஞ்சம் செய்ததும் (6-4-6)
புள்ளைப் பிளந்ததும் (6-4-7)

**374. அமிதாசந :** அளவில்லாமல் உணவு உண்டவன், இந்திரனுக்கு இடவேண்டிய உணவு வகைகள் யாவும் கோவர்த்தன மலை வடிவில் உண்டவன்.

உண்ண வானவர் கோனுக்கென்று, ஆயர்
ஒருப்படுத்த அடிசில் உண்டதும் (5-10-5)

உத்பவ: க்ஷோபணோ தேவ:
ச்ரீகர்ப்ப: பரமேச்வர: ।
கரணம் காரணம் கர்த்தா
விகர்த்தா கஹநோ குஹ: ।। 41 ।।

**375. உத்பவ :** தான் கட்டுண்டதை நினைப்பவர்களது ஸம்ஸார பந்தத்தை அறுப்பவன்.

இப்பத்தும் நோய் அறுக்குமே (9-7-11)

[நோய்-உலகில் பிறவி]

**376. க்ஷோபண :** ப்ரளயம் முடிந்ததும் ப்ரக்ருதியையும் ஜீவ ராசிகளையும் கலக்குவோன்; அதாவது முன்னைநிலை இல்லாமல் உற்பத்தி செய்பவன்.

உலகேழும் உண்ட அவன் கண்டீர்-
இவை படைத்தான் (3-6-1)

**377. தேவ :** லீலாவிபூதியின் நிர்வாஹத்தை லீலையாக உடையவன்; ஜீவர்களை மாயை என்னும் கயிற்றினால் கட்டி விளையாடுவோன்.

இன்புறும் இவ்விளையாட்டுடையானை (3-10-9)

**378. ச்ரீகர்ப்ப :** பிராட்டியுடன் அனுபவித்து, மனங்களிக்கச் செய்து, கர்ப்பம் போல் காப்பவன்.

அல்லி மலர்மகள் போக மயக்குக்களாகியும்
நிற்கும் அம்மான் (3-10-8)

**379. பரமேச்வர :** இவளுடன் என்றும், கூடியிருப்பதால், அபாரமான சக்தி வாய்ந்தவன். (தனது பரம ஐச்வர்யத்திற்குப் பயன் பெற்றவன்)

உன் தாமரை மங்கையும் நீயும்,
இடங்கொள் மூவுலகும் தொழஇருந்தருளாய் (9-2-3)

(தொடரும்)



(தொடர் கட்டுரை)

# நாலாயிரத்தில் நற்பறவைகள்

திரு. ஆர்.டி. சாரி - கோம்பூர்.

## கோழி/சேவல்

விடியற்காலையில் கதிரவன் கீழ்வானத்தில் வரும் முன்னம் சேவல் கூவியபின்னரே மனித குல வாழ்க்கையின் நடமாட்டங்கள் ஆரம்பமாகின்றன.

### ஆண்டாள் :

ஆண்டாள் தன் நாச்சியார் திருமொழியில், 'கோழி அழைப்பதன் முன்னர் குடைந்து நீராடச் சென்றோம். கதிரவன் கீழ் வானத்தில் மேல் எழுந்தான். தோழியும், நானும் உன்னைத் தொழுதோம். துகிலைப் பணித்தருளாயே' என்ற பாசுரத்தைக் காண்போம்.

"கோழி யழைப்பதன் முன்னம்
குடைந்துநீ ராடுவான் போந்தோம்
ஆழியஞ்செல்வன் எழுந்தான்
அரவணை மேற்பள்ளி கொண்டாய்!
ஏழைமை யாற்றவும் பட்டோம்
இனியென்றும் பொய்கைக்கு வாரோம்
தோழியும் நானும் தொழுதோம்;
துகிலைப் பணித்தருளாயே!

ஆண்டாள் திருப்பாவையில் 18-வது பாடலில:

"உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்
கந்தம் கமழும் குழலீ கடைதிறவாய்
வந்து எங்கும் கோழி அழைததனகாண்
மாதவி பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார்விரலி உன் மைத்துனன் பேர்பாட
செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ
ரெம்பாவாய்!" என்கின்றூர்.

இப்பாசுரத்தில் பொழுதுபுலரந்துவிட்டது என்று உலகத்தாருக்குக கூறும் வண்ணம் கோழிகள் விழித்தப் போதெல்லாம் கூவும். பின்னர் உறங்கிவிடும். மீண்டும் விழிததபோது கூவும். அப்படி பொழுது புலரவில்லை என்று சந்தேகம் கொணடு மீண்டும் துயில்கின்ற பெண்களே மாதவி பந்தல்மேல் அதாவது குருகத்தி பநதல்மேல் பலதடவை குயிலினங்கள் கூவி விட்டன. கண்ணன் பேர் பாட கதவைத் திறவாய் என்று அழைக்கின்றூர.

### திருமங்கையாழ்வார்

மாயனை அழைக்க பறவைகளை அழைத்துப் பாடுகின்ற பாசுரத்தில்,

"கோழி கூசென்னுமால்
தோழி நானென் செய்கேன்?
ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று
கோழி கூவென்னுமால்"

என்கின்றூர்.

மற்றுமொரு பாசுரததில்,

"ஆழியும் சங்கும் உடைய நங்கள் அடிகள் தாம்
பாழிமை யான கனவில் நம்மைப் பகர்வித்தார்
தோழியும் நானும் ஒழிய வையம் துயின்றது
கோழியும் கூகின்றதில்லைக் கூரிருளாயிற்றே"

என்று பாடுகின்றூர்.

### நம்மாழ்வார்

நம்மாழ்வார் 4-ம் திருவாய்மொழியில், முதல் பத்தில், நாரையையும் சேவலையும் தூதாக அனுப்பும் இப்பாடலைக் காண்போம்.

"அஞ்சிறைய மடநாராய் அளியத்தாய் நீயும்நின்
அஞ்சிறையை சேவலுமாய் ஆவா வென்றெனக் கருளி
வெஞ்சிறைப்புள் ளுயர்த்தாற்கு என் விடுதூ தாய்ச் சென்றக்கால்
வன்சிறையிலவன் வைக்கில் வைப்புண்டாலென் செய்யுமோ"

புள்ளினங்களை தூதுவிடும் 6ம் பத்து 8ம் திருவாய்மொழி பாசுரத்தில்,

"வந்திருந் தும்முடைய மணிச் சேவலும் நீருமெல்லாம்
அந்தர மொன்றுமின்றி அலர்மே-லசையு மன்னங்காள்"

என்று பாடுகின்றூர்.

9ம் பத்து 5ம திருவாய்மொழியில்,

"இன்னுயிர்ச் சேவலும் நீருங்கூவிக் கொண்டு இங்கெத்தனை
என்னுயிர் நோவமிழற்றேல்மின் குயில்பேடைகாள்" என்றும்,

மற்றொரு பாசுரத்தில்,

"கூக்குரல் கேட்டும் நங்கண்ணன் மாயன் வெளிப்படான்
மேற்கிளை கொள்ளேல் மின் நீரும் சேவலும் கோழிகாள்"

என்றும் பாடுகின்றூர்.

திருமுழிக்களம் ஸ்ரீஸூக்திநாத இறைவனைப் பாடும் பாசுரத்தில்,

"நும ரோடும் பிரியாதே நீரும்நும் சேவலுமாய்
அமர்காதல் குருகினங்காள் அணிமுழிக் களத்துறையும்"

என்கின்றார்.

அன்றில்

## திருமங்கையாழ்வார்:

திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமடலில், ஆற்றாத தலைவி,

முன்னிய பெண்ணைமேல் முன்முளரிக்கூட்டகத்து
பின்னும் அவ்வன்றில் பேடைவாய்ச் சிறுகுரலும்
என்னுடைய நெஞ்சுக்கு ஓர்ர்வாளாம் என்செய்கேன்?

என்று பாடுகின்றார்.

## நம்மாழ்வார் :

9ம் பத்து 5ம் திருவாய்மொழியில், நம்மாழ்வார்,

இத்தனை வேண்டுவதன்றந்தோ அன்றில் பேடைகாள்
எத்தனை நீரும் நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்"

என்று பாடுகின்றார்.

நம்மாழ்வாரின் ரிக்வேதசாரமான திருவிருத்தத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி வாடைக்கு ஆற்றாது வருந்தி கூறும்போது, அன்றில் பறவையின குரலுக்கு ஆற்றாத தலைவியின் தளர்ச்சி கண்டு தோழி இரங்குகையில்,

"விளரிக்குரலன்றில் மென்படை மேகின்ற முன்றில் பெண்ணை
முளரிக்குரம்பை இதுவிதுவாக முகில்வண்ணன்பேர்
தளரிற்கொலோ? அறியேன் உய்யலாவது இத்தையலுக்கே"

என்று பாடுகின்றார்.

நம்மாழ்வாரின் திருவிருத்தத்தில் அன்றிலுக்கும் ஆழிக்கும் ஆற்றாத தலைவிக்குத் தோழி இரங்கும் இப்பாசுரமாவது:

"புலம்பும் கனகுரல் போழ்வாய அன்றிலும் பூங்கழி பாய்ந்து
அலம்பும் கனகுரல் சூழ்திரை ஆழியும் - ஆங்கவை
வலம்புள்ளது நலம்பாடும்"

திருமாலைப் பிரிந்த தலைவி கருடனின் சிறப்பைப் பேசி ஆறுதல்பெற விழைகிறாள். இவள் பேசும் போது இவள் துயரை அதிகரிக்கும் வண்ணமே அன்றில் பறவை கனத்த தன் குரலால் வாய் பிளந்து விரக வேதனையுடன் கத்துகின்றது. அன்றிலும், கடலும் கருடனை சிறப்பித்துப் பேசியதைக் குற்றமாக எடுத்துக் கொண்டு ஒலிக்கின்றனவே என் எய்கேன் என்று புலம்புகிறாள்.

நாரை :

## திருமழிசைப்பிரான்

திருமழிசைப் பிரான் நாரைப் பறவையைப் பாடுகின்ற போது,

"கொண்டைகொண்ட கோதைமீது தேனுலாவு கூனி கூன்
உண்டைகொன் டரங்க வோட்டி உள் மகிழ்ந்த நாதனூர்
நண்டையுண்டு நாரை பேர வாளைபாய, நீலமே
அண்டை கொண்டு கெண்டைமேயும் அந்தணி ரரங்கமே!"

நம்பெருமாளைப் பாடுகின்ற இதே பாசுரத்திலே "நண்டை உண்டு வாழ்கின்ற நாரைப் பறவையும்" பாடப்படுகிறது.

## திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் திருக்கூடலூர் திருப்பதியைப் பாடுகின்றபோது,

"கள்ள நாரை வயலுள் கயல்மீன்
கொள்ளை கொள்ளும் - கூடலூரே"

என்று நாரையின் கள்ளத்தை நன்கு அறிந்த ஆழ்வார் பாடலை சுவைப்போம்.

திருநரையூரைப் பாடுகின்ற போது,

"தாரையூரும் தண்தளிர் வேலி புடைசூழ
நாரையூரும் நல்வயல் சூழ்ந்த நறையூரே"

என்று பாடுகின்றார்.

திருக்குறுங்குடியைப் பாடுகின்றபோது,

"ஏழைச் செங்கால் இன்துணை நாரைக்கிடை தேடி
கூழைப் பார்வைக் கார்வயல் மேயும் குறுங்குடியே" என்கிறார்.

## நம்மாழ்வார்:

"வாயுந் திரையுகளும் கானல் மடநாராய்
ஆயு மமருலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்
நோயும் பயலைமையும் மீதூரு வெம்மே போல்
நீயும் திருமாலால் நெஞ்சங் கோட்பட்டாயே"

என்னும் நம்மாழ்வாரின் பாசுரம் அழகான பாசுரம்.

(கடலலைகள் சளக்காது உறுமீன் வருமளவும் காத்திருக்கும் நாராய்! எம்பெருமானைப் பிரிந்து பசலை நோயில் உழல்கின்றேன் நான். இந்நோய் நஞ்சுபோல் என்னை பாவித்து உறக்கம் தவிர்த்து விட்டது. இப்படி வருந்தும் என்னைப் போல் நீயும் திரு

மாலிடம் நெஞ்சைப் பறிகொடுத்து விட்டாயா?)

நம்மாழ்வார் திருமூழிக்களம் ஸ்ரீஸூக்திநாத இறைவனைப் பாடும் பாசுரத்தில்,

"எங்கான லகங்கழிவாய்
இரைதேர்ந்திங் கினிதமரும்

செங்கால மடநாராய்"
என்று பாடுகின்றார்.

திருமங்கை மன்னன் திருநெடுந்தாண்டகத்தில் தலைவி திருமாலுக்கு நாரைவிடுதூதாக பாடும் கவியழகைக் காண்போம்.

தலைவி திருக்கண்ணபுரத்து அம்மானுக்கு தன் காதலைக் கூற சிவந்த கால்களை உடைய நாரையை தன் பேடுடன் கலப்பதால் அறிவு இழந்து நின்றாலும், திருக்கணபுரம் சென்று செந்தாமரை கண்ணன் அம்மான் கண்ணனிடம் தன் காதலை சொல்லுவாயாகில், சோலை சூழ்ந்த நாடெல்லாம் உனக்கே உரியவனவாக செய்து, நீர்நிலைகளிலுள்ள மீன்களை நீ விழுந்து உண்ணுமாறு விருப்பத்துடன் கொடுப்பேன் என்கின்றார்.

அப்பாசுரமாவது:

"செங்கால் மடநாராய்! இன்றே
சென்று
திருக்கண்ண ` புரம்புக்கென்
செங்கண்மாலுக்கு
என்காத லென்துணைவர்க்
குரைத்தி யாகில்
இது வொப்ப தெமக்கின்ப மில்-
லைநாளும்
பைங்கான மீதெல்லா முனதே யாகப்
பழன மீன் கவர்ந்துண்ணத்
தருவன் தந்தால்
இங்கேவந் தினிதிருந்துன்
பெடையும் நீயும்
இரு நிலத்திலினிதின்பம்
மெய்தலாமே"

## ஆனைச்சாத்தன்

### ஆண்டாள்:

ஆண்டாள் திருப்பாவையில் 7வது பாடலில்,

"கீசுகீசென்று எங்கும் ஆனைச்சாத்தன்
கலந்து பேசின பேச்சரவம்
கேட்டிலையோ பேய்பெண்ணே!"
என்று பறவையினங்களைப் பரந்தாமனுடன் சேர்த்துப் பாடுகின்றார்.

'பாரத்வஜன் என்னும் பறவைகள் (வலியன்) எல்லா இடங்களிலும் கலந்து ஆணும், பெண்ணுமாக சேர்ந்து கீசுகீசென்று கூவிய பேச்சு ஒலியைக் கேட்கவில்லையா? பேய்பெண்ணே! எம்பெருமான் விஷயமும், எம்பெருமானாரின் அடிகளார் விஷயமும் சிறந்தது என்று அறிந்தும் உறங்குகின்றாயே! மதிகெட்டவளே!' என்கின்றார்.

## கழுகு

### திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் நைமிசாரணியம் என்னும் திருப்பதியைப் பாடிவிட்டு சிங்கவேள் குன்றம் என்னும் அஹோபில திருப்பதியைப் பாடுகின்ற பாசுரத்தில்:

"கவ்வும் நாயும் கழுகும் உச்சிப்
போதொடு கால் சுழன்று
தெய்வமல்லால் செல்லவொண்ணாச்
சிங்கவேள் குன்றமே"
என்று பாடுகின்றார். இந்தச் சிங்கவேள் குன்றத்தை அடைவதற்கான சிரமங்களை எடுத்துரைக்கிறார்.

(தொடரும்)



## உதயாஸ்தமான ஸர்வ சேவா அறக்கொடை திட்டம்

| | நன்கொடை ரூ. |
|---|---|
| வெள்ளிக்கிழமை தவிர்த்து மற்றைய எந்த நாளாயினும் | 1,00,000/- |
| வெள்ளிக்கிழமைகளில் | 3,00,000/- |

நன்கொடையாளரைச் சார்ந்தவர்கள் (மொத்தம் 6 நபர்கள்) காலை சுப்ரபாதம் முதற்கொண்டு ஏகாந்த சேவை வரையிலான எல்லா சேவைகளுக்கும் குறிப்பிட்ட நாளன்று அனுமதிக்கப்படுவர். அன்று நடைபெறும். மற்றைய ஆர்ஜித சேவைகளை கண்டு களிககவும் அனுமதிக்கப்படுவர்.
அன்பளிப்பு : ஒவ்வொரு ஆண்டும் ஒரு கல்யாணோத்ஸவ வஸ்த்ரம், 25 லட்டுகள், 5 வடைகள் வழங்கப்படும்.

# ஸப்தரிஷி ராமாயணம்

திரு. என். ராமசர்மா - கும்பகோணம்.

ராமனை நினைக்காதவர்கள் யாருமில்லை. ராமாயணத்தை, ராமசரித்திரத்தை அனுபவிக்காதவர்கள் யாருமில்லை. பண்டித வேறுபாடின்றி அனைவருக்கும் இனிமையும், நலனும் கொடுப்பது ராமசரிதம். பாமரனைப் பண்டிதனாக்கும் பெருமையுடையது ராமசரிதம். பண்டிதனுக்கு அனுபூதியைக் கூட்டுவிப்பது ராமசரிதம்.

நிர்க்குண பிரும்ம நிஷ்டையிலேயே திளைத்துநிற்கும் மஹரிஷிகளையும் ரமிக்கச்செய்வது ராமசரிதம். பிரும்ம நிஷ்டர்களான கச்யபர், அத்ரி, பரத்வாஜர், விச்வாமித்ரர், கௌதமர், ஜமதக்னி, வசிஷ்டர் ஆகிய ஸப்த ரிஷிகளும் ஒரு சமயம் ஸமாதி கலைந்து எழுந்து வந்த காலத்தில், தாங்கள் ஸமாதியில் அனுபவித்த ராம விருந்தை அனைவரும் பெற வேண்டும் என்று விரும்பி ராமகானம் செய்து எல்லோரையும் அழைத்தனர்.

அந்த ஏழு ரிஷிகளும் செய்த ராமகானம் ஸப்தரிஷி ராமாயணம் என்று பெருமைபெற்றது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு காண்டத்தின் கதையைக் கடைசியில் பல ச்ருதியாக அனைவரும் சேர்ந்து எட்டாவதாக ஒரு சுலோகம் கூறினர். இந்த எட்டு சுலோகங்களையும் பாராயணம் செய்வதால் ராமாயணம் முழுமையையும் பாராயணம் செய்த பயன் கிடைக்கும். இம்மை மறுமை இரண்டினும் உயர்வற உயர்



நலன் பெறலாம். "கற்பார் ராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்ற ஆழ்வாரின் அமுதவாக்கு வாழ்வில் பளிச்சிடக் காணலாம்.

கச்யபர் கூறியது, ।

ஜாத: ஸ்ரீரகுநாயகோ தசரதாந்-
முந்யாச்ரயாத்தாடகாம்
ஹத்வா ரக்ஷித கௌசிகக்ரதுவர:
க்ருத்வாப்யுஹல்யாம் சுபாம் ।
பங்க்த்வா ருத்ர சராஸனம் ஜனகஜாம்
பாணௌ க்ருஹீத்வா ததோ
ஜித்வார்த்தாத்பனி பார்க்கவம்
புநரகாத்ஸீதாஸமேத: புரீம் ।।

தசரத சக்கரவர்த்தித் திருக்குமாரனாக, ரகுகுல திலகமாக ராமன் அவதரித்தான். முனிவரின் வேள்வி காக்க கானகம் சென்றான். வழியில் தாடகையைக் கொன்றான். கௌசிகன் வேள்வி காத்தான். மிதிலா நகர் செல்லும் வழியில் அகலிகை மாசுநீக்கி நலன் கொடுத்தான். சிவ தநுஸ்ஸை முறித்து ஸீதையின் கரங்கள் பிடித்தான். தன் நகர் திரும்பும் காலையில் பரசுராமரின் கர்வத்தை நீக்கினான். அயோத்தியில் பிராட்டியுடன் பல வருடங்கள் இனிதே வாழ்ந்தான்.

அத்ரி கூறியது: ।

தாஸ்யா மந்தரயா தயாரஹிதயா
துர்பேதிதா கைகயீ
ஸ்ரீராம ப்ரதமாபிஷேக ஸமயே
மாதாப்யயாசத்வரௌ ।
பர்த்தாரம் பரத: ப்ரசாஸ்து தரணீம்
ராமோ வனம் கச்சதா
தித்யாகர்ண்ய ஸ சோத்தரம்
நஹிததௌ துக் கேந
மூர்ச்சாகத: ।। (2)

இரக்கமற்ற நெஞ்சினளான வேலைக்காரி மந்தரையால் கைகேயியின் மனமும் தீயவழியில் சென்றது. ராமனுக்கு முதலில் இளவரசுப் பட்டம் கட்டப்போகிறேன் என்ற தீர்மானத்தை கணவன் மூலம் கேட்டவுடனேயே இருவரங்களை கேட்டாள். ஒரு வரத்தால் பரதன் நாடாளவும், மற்றொரு வரனால் ராமன் காடு புகவும் வற்புறுத்தினாள். இதைக்கேட்டவுடன் மன்னன் எந்தவொரு பதிலையும் கூறாமல் மூர்ச்சையானான்.

பரத்வாஜர் கூறியது: ।

ஸ்ரீராம: பித்ரு சாஸநாத்வநமகாத்
ஸௌமித்ரி ஸீதாந்விதோ
கங்காம் ப்ராப்ய ஜடாம் நிபத்ய
ஸகுஹ: ஸச்சித்ரகூடேவஸந் ।
க்ருத்வா தத்ர பித்ருக்ரியாம் ஸ

பரதோ தத்வாஅபயம் தண்டகே
ப்ராப்யாகஸ்த்ய முநீச்வரம்
தத்திதம் த்ருத்வா தநுஸ்சாக்ஷயம் ।। (3)

தந்தை சொல்மிக்க மந்திர மில்லை என்றுணர்ந்து லக்ஷ்மணனும், பிராட்டியும் பின்தொடர வனம் புகுந்தான். கங்கைக் கரையடைந்தான். குஹனை சந்தித்தான். ஜடை தரித்தான். அழகிய சித்ரகூட மலையில் தங்கினான். அங்கு வந்து சேர்ந்த பரதனோடு தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமச்சடங்குகளைச் செய்தான். தண்டக வனம் புகுந்தான். 'அஞ்சற்க' என்று முனிவர்களுக்கு அபயம் கொடுத்தான். முனிவரான அகஸதியரை அடைந்தான். அவர் ஆசி பெற்றான். எடுக்க எடுக்கக் குறையாத அம்புருத்தூணிகளையும், தேவத்தன்மை வாய்ந்த வில்லையும் பெற்றான்.

விச்வாமித்ரர் கூறியது:

கத்வா பஞ்சவம் மகஸ்த்ய வசநாத்
தத்வா அபயம் மௌநிநாம்
சித்வா சூர்ப்பணகாஸ்ய
கர்ணயுகளம்
த்ராதும் ஸமஸ்தாந்முநீன் ।
ஹத்வா தம் ச கரம் ஸுவர்ண
ஹரிணம் பித்வாததாவாலிநம்
தாராத்னமவைரி ராஜ்யமகரோத்
ஸர்வம் ச ஸுக்ரீவஸாத் ।। (4)

அகஸ்தியரின் ஆலோசனையின் பேரில் பஞ்சவடி சென்று தங்கினான். அங்கு முனிவர்களுக்கு அபயம் கொடுத்தான். முனிவர்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டே அங்கு வந்த சூர்ப்பணகையின் காதுகளையும் மூக்கையும் வலிய அறுக்கச் செய்தான். கரனை வதம் செய்தான். கபட எண்ணத்துடன் வந்த பொன்மானைக் கொன்றான். பிறகு வாலியைக் கொன்று திவ்யமான மாலையையும் எதிரிகளற்ற அரசையும் சுக்ரீவனுக்குக் கொடுத்தான்.

கௌதமர் கூறியது:

தூதோ தாசரதே: ஸலீல முததிம்
தீர்த்வா ஹநுமாந்மஹாந்
த்ருஷ்ட்வாஅசோகவநே
ஸ்திதாம் ஜநகஜாம் தத்வா
அங்குலேர் முத்ரிகாம் ।
அக்ஷாதீந் அஸுராந் நிஹத்ய
மஹதீம் லங்காம் ச தக்த்வா புந:
ஸ்ரீராமம் ச ஸமேத்ய தேவ ஜனநீ
த்ருஷ்ட்வா மயேத்யப்ரவீத் ।। (5)

தசரத குமாரனின் தூதனாக அனுமன் விளையாட்டாகவே கடல் கடந்து சென்றான். அசோக வனத்தில் பிராட்டியைக் கண்டான். கணையாழி கொடுத்தான். சீதையின் துயர் துடைத்தான். ராவண குமாரனான அக்ஷன் போன்ற அரக்கர்களைக் கொன்றான். லங்கா நகரை தீக்கு இரையாக்கினான். பிரபு! கண்டேன் தாயை எனக் குளிர மொழிந்தான்.

ஜமதக்னி கூறியது:

ராமோ பத்தபயோநிதி: கபிவரை:
வீரைர்நளாத்யைர்வ்ருதோ
லங்காம் ப்ராப்ய ஸகும்பகர்ண
தநுஜம் ஹத்வாரணே ராவணம் ।
தஸ்யாம் ந்யஸ்ய விபீஷணம்
புநர ஸௌ ஸீதாபதி: புஷ்பகா
ரூட: ஸந் புரமாகத: ஸ பரத:
ஸிம்ஹாஸநஸ்தோ பபௌ ।।

நளன் முதலான வானர வீரர்கள் புடை சூழ கடலில் அணைகட்டி கடல்கடந்து லங்கை சென்றடைந்தான ராமன். தமபி கும்பகர்ணனோடும் மகன் இந்திரஜித்தோடும் மற்ற பல அரக்கத்தலைவர்களோடும் ராவணனைக் கொன்றான். விபீஷணனுக்கு முடி சூட்டி லங்கா ராஜயத்தைக் கொடுத்தான். பிராட்டியோடும் மற்ற அனைவரோடும் புஷ்பக விமானத்தில் அயோத்திக்கு 14 வருட முடிவில் திரும்பினான். பரதனோடு இணைந்தான். அரியணை ஏறினான். பட்டாபிஷேகம் செய்து கொண்டான்.

வசிஷ்ட உவாச ।

ஸ்ரீராமோ ஹயமேத முக்யமகக்ருத்
ஸம்யக்ப்ரஜா பாலயந்
க்ருத்வா ராஜ்யமதாநுஜைஸ்ச
ஸுசிரம் பிரஸ்வதர்மாந்விதௌ ।
புத்ரௌ ப்ராத்ரு ஸமந்விதௌ
குசலவௌ
ஸம்ஸ்த்தாப்ய பூமண்டலே
ஸோஅயோத்யாபுரி வாஸிபிஸ்ச
ஸரயூஸ்நாத: ப்ரபேதே திவம்।।

அச்வமேதம் போன்ற உயர்ந்த யாகங்களைச் செய்தான் ராமன்.

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின எண்ணிக்கை ஆகியவை கொணட முழுத்தக வல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.






## தி.தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில்,

## திருச்சானூர்.

### வெள்ளிக்கிழமை நிகழ்ச்சி நிரல்கள்:

**காலை**

5-00 முதல் 5-30 வரை .... சுப்ரபாதம்
5-30 முதல் 6-30 வரை .... ஸஹஸ்ரநாம அர்ச்சனை நித்ய அர்ச்சனை, முதல்மணி
6-30 முதல் 7-00 வரை .... சடலிம்பு
7-00 முதல் 8-00 வரை .... அபிஷேகம்
8-00 முதல் 9-00 வரை .... மூலவர்க்கு அலங்காரம் இரண்டாவது மணி
9-00 முதல் இரவு 8-00 வரை .... ஸர்வ தரிசனம்

**மாலை**

6-00 முதல் 8-00 வரை .... திருவீதிஉலா மற்றும் ஊஞ்சல் சேவை

**இரவு**

8-00 முதல் 8-30 வரை .... இரவு கைங்கர்யம், இரவு மணி
8-30 முதல் 9-00 வரை .... ஸர்வ தரிசனம்
9-00 மணிக்கு .... சுத்தி, ஏகாந்த சேவை

### அபிஷேகம்

**மாலை**

7-00 முதல் 8-00 வரை .... அபிஷேகம். நபர் ஒருவர் ரூ. 100/- செலுத்தி பங்கேற்கலாம் ரூ. 5/- நபர் ஒருவர் செலுத்தி 'அபிஷேக தரிசனம்' காணலாம்.

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகள் உண்டு.



செவ்வனே அரசு நடத்தினான். தன் உடன் பிறந்தவர்களோடு கூட ஸ்வதர்மத்தை குறைவற நடத்திக்காட்டினான். சகோதரர்களின் பாதுகாப்பில் தன் குமாரர்கள் லவன், குசன் இருவருக்கும் பட்டாபிஷேகம் செய்து அரசுப் பொறுப்பைக் கொடுத்தான். அயோத்தி மாநகரத்தின் மக்களோடுகூட ஸரயூ நதியில் இறங்கி விண்ணுலகடைந்தான்.

எல்லா முனிவர்களும் கூறியது:

ஸ்ரீராமஸ்ய கதாஸுதாஅதி மதுராந்
ச்லோகாநிபாநுத்தமாந்
யே ச்ருண்வந்தி படந்தி ச
ப்ரதிதினம்
தேஅகௌக வித்வம்ஸிந: ।
ஸ்ரீமந்தோ பஹுபுத்ரபௌத்ரஸஹிதா
புக்த்வேஹ போகாம்ச்சிரம்
போகாந்தே து ஸதார்சிதம்
ஸுரகணை:
விஷ்ணோர் லபந்தே பதம் ।।

தேவருலகத்து அமுதைக் காட்டிலும் இனிமையாயிருக்கும் இந்த ஏழு சுலோகங்களையும் தினந்தோறும் படிப்பவர்களும் கேட்பவர்களும் ராமசரித மகிமையால் எல்லா பாவங்களும் நீங்கியவர்களாகி விடுவார்கள். செல்வம், ஆரோக்கியம், மகப்பேறு போன்ற எல்லா நலன்களையும் பெருக்கும். இச்சுலோக பாராயணம் உலக நலன்களை பலப்பல வருடங்கள் துலக்கச்செய்யும்; இம்மை மறுமை இரண்டிலும் மேலான நன்மையைத்தரும். இறுதியில் நாரணன் திருவடிகளை அடையும் பேறு கிட்டும். தேவர்களால் துதிக்கப்படும் யோகிகளுக்கும் எட்டாத பதம் ஸப்தரிஷி ராமாயண கானத்தால் கிடைக்கும்.

*************

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## த

தக்கணை - தக்ஷிணை
தக்கதிதன்று - இது தக்கதன்று
தக்கமரம் - ஏறத்தகுந்த மரம்
தக்கமாமணி - மிகவும் ஒளியுடைய ரத்தினம்
தக்க வைவர் - நன்மையையுடைய ஐவர் - பாண்டவர்கள்
தக்கன் - தக்ஷன்
தக்கோர் - தகுதியுடையோர்; ஸம்ஸாரிகள்; பெருமையுடையோர்
தக்கிலம் - தகுதியுடையோமல்லோம்; தகோம்
தக்கினது - தகுந்தது
தக்கோர்மை - நியாயம்; நன்மை; பெரியதனம்; கருணை
தகண் - தழும்பு
த்கர் - ஆடு; மேடு; சிதறினது; பூமி
தகர்த்தல் - நோவுபடுத்துதல்; துணித்தல்; நம்புதல்
தகர்ப்புண்ணும் - நலிவு படும்
தகர விழுதல் - முறிந்து விழுதல்
தகவு - தயை; தகுதி; தெளிவு
தகவாத்தொழும்பர் - தகாத தாழ்மையையுடையவர்
தகவில்காலன் - இரக்கமில்லாதவன்
தகளி - அகல்; விளக்கு ஏற்ற உதவுவது
தகுவது - போரும்; ஒப்பாகும்
தகை - இயல்பு; தன்மை; ஞானம் பெருமை
தகைத்தல் - செறிதல்
தங்கலுற்றவன் - தங்க விருப்பமுடையவன்
தங்கல் - தொங்கல்
தங்கள்தலையால் - தங்களால்
தங்கு. வேட்டை - வேறு இடத்தில் வந்து தங்குவது பரஸ்தாநம்
தசை முறுகினால் - தசை முற்றினால்
தசைப்பு - தடிப்பு
தஞ்சம் - உறுதுணை
தஞ்சு - தஞ்சம்
தட்டி - சிறை; கொட்டம்
தட்டி - கோயிலில் மங்களாலத்திக்காக திரிஏற்றி வரும் தட்டு; விளக்குத்தட்டு
தட்டித் திரிதல் - தடுமாறித்திரிதல்
தட்டு - இதழ்; தேர்நடுபாகம்; அடி; குற்றம்
தட்டுமாறுதல் - இடம் மாறுதல்
தட்டுப்பாய - தன்கப்பிலேயிருந்து எதிர் கப்பிலே பாய
தட்டுளுப்பாகின்றது - தடுமாறிச் செல்லா நின்றது. உளுத்தமரத்தைத் தட்டும்போது சிதிலமாப்போலே எண்ணுதல். தட்டுள் உப்பாகின்றது - ஜலபாத்திரத்தில் உப்புபோல் கரையாநின்றது என்றும் சொல்லுவர்
தட்டொளி - கண்ணாடி; தட்டுஒலி - ஒளி ஒலியாய் அத்தால் ஓசை வருகிற பறையையும் சொல்லுவர்
தட்டோடு - கட்டிடத்தின் மேல் பாகத்தில் போட்டுத்தட்டும் ஓடு. கனமில்லாத செங்கல்
தடக்கை மா - பெரிய கையை (துகிக்கை) உடைய யானை
தடம் - சுற்றுடமை; பெருமை; வளைவு; தடாகம்; கரை
தடஞ்சிலை - அளவுடைய (பெரிய) வில்
தடவந்து - தடவி; தொட்டுக்கொண்டு வந்து
தடந்தாள் - நடைபொறுக்கும்படி கெட்டியாக இருக்கையாலே தடந்தாள் என்கிறர்
தடநெஞ்சம் - பெரிய மார்பு
தடம்பொங்கொத்தம்-பொங்கோ - இதனை வாத்ய ஓசையாகக் கூறுவர். தடம் என்று திடும்திடும் என்றபடி. எதிரிகளைவென்று அவர்கள் வெற்றியாலே வாத்ய ஒலியைப் பணணுவித்து அதுக்கு ஈடாக ஆடுவது போல தோற்றவர்கள் தோல்வியாலே பறையடிக்க ஆடுவது ஒரு கூத்து உண்டு. அந்த ஒலி பொங்கொத்தம் பொங்கு என்பதாக உரையாசிரியர் கூறுவர்.
தடமண்ணி - விசாலமான மண்ணி ஆறு
தடவரை - பெரிய மலை
தடவாரி - பலவகையான பறை வாத்யங்கள்
தடவற்பொய் - விளையாட்டாகச் சொன்ன பொய்
தடா - தவலை; மிடா
தடஸ்தம் - நேரே சம்பந்தம் இல்லாதது
தடாவியது - முறிந்தது; விலங்கிற்று
தடாவிய அம்பு - வளைந்த அம்பு; தடவுதல் பரவுதலாய் பரந்த வாயையுடைய அம்பு. வில்லோடே சேர்த்துப் பிடித்த அம்பு

தடி - உலக்கை, கோல். பூமி. தடியால் அளக்கைபற்றி தடி பூமியாயிற்று
தடிக்க - உடம்பு பருக்க
தடிக்கூறு - கோலாலே அளந்து பாகமாகப் பிரிக்கை தடி-வயல்
தடிந்த - அறுத்த; தீர்த்த; உழக்கி நெறித்த
தடிந்துண்ணும் - கொன்று தின்னும்
தடிபிணக்கு - தடி எடுத்து சண்டைபோடுவது
தடுக்கு - ஆசனம்; வீடு; குடிசை
தடு குட்டம் - கால் தரையில் பரவாது ஆடும் கூத்து
தடுமாற்றம் - அலைச்சல்
தண்கடல்வட்டம் - குளிர்ந்த கடலுக்குட்பட்ட பூமி
தண்கா - திருத்தண்கா எனனும் திவ்ய தேசம். காஞ்சியில் உள்ளது
தண்கால் - திருத்தண்கால் என்னும் திவ்யதேசம். ஸ்ரீவில்லிப்புத்தூர் அருகில் உள்ளது.
தண்டகம் நூற்றவள்- ராஜ்யத்தை விடுவித்து தண்டக வனத்திலே விடக்கடவோம் என்று எண்ணிய கைகேயி. நூல் என்பதற்கு சாஸ்த்திரம் என்று பொருளாய் அது விசாரரூபமாகையாலே இலக்கணையாக விசாரித்தவளான கைகேயிக்குப் பெயர் என்பர்.
தண்டடம் - குளிர்ந்த கரை
தண்டல் - சேனை; ஆயுதத்தில் வேறுபாடு
தண்டகை - தண்டகாரணியம்; கருணையுடையவன்.
தண்டம் - ஊன்று கோல்; குடைக்காம்பு
தண்டல் படையினான் - யமன்
தண்டவாக்கன் - தண்டிக்கத்தகுந்த அரக்கன்
தண்டாமம் - குளிர்ச்சியையுடைய பரமபதம் தாமம் - இடம்
தண்டை - காவல்; கால்தண்டை; வால்
தண்ணடை - உடுக்கை; காடு; பச்சிலை
தண்டு - பல்லாக்கு; வீணை
தண்டுகாலூன்றி - தண்டத்தையே காலாக ஊன்றி
தண்ணளி - குளிர்த்தி
தண்ணனவு - மெத்தெனவு . தணிதல்
தண்ணுவாது - தாழாதே, விளம்பியாதோ, தாமதியாமல்
தண்ணிது - மட்டமானது
தண்ணிலங்கை - தண் என்று அழகாய் கட்டளைப்பாடுடைய இலங்கை
தண்ணீர்த்துரும்பு - இடையூறு; தடங்கல்
தண்ணுமை - திருவரையில் சாத்தின பறை; சிறு மங்களவாத்தியம்
தணம் - பரண்
தண் பாசடை - குளிர்ந்த பச்சிலைச் செறிவு. பாசு-பசுமை அடைஇலை
தண்பூங்காலம் - குளிர்ந்து அழகிய காலம்
தண்மை - தட்பம்; அமைதி
தணரில் - பிரியில், தாழ்க்கில்
தணி - கெடு, குறை
தணியும் பொழுதில்லை - தீருவதொருபொழுதில்லை
தணிவிலர் - சிரத்தையுள்ளவர். தணிவு-ஆறுதல் - அதுஇல்லாதவர்
தத்தி - தாவி, குதித்து
தத்திப்பதித்து - மாறிமாறிப்பதித்து. தத்தி என்றது தத்தவாய் மாறப் பதித்த என்றபடி
தத்தும் - தன் கீழே ஆக்கிக்கொள்ளும்
தத்துவம் - உண்மை; சொரூபம்
தத்துறுகை - கிட்டுகை; தட்டுப்படுகை
ததர்த்த ஒலி - நெரிந்து விழுகிற ஓசை
ததைக்கின்ற - தழைந்துள்ள
ததைத்து - நெருக்கி
ததி - தயிர்
தந்தாமது - தங்கள் தங்களுடையது
தந்திரம் - மந்திரம் இல்லாத செயல்
தந்துவனாய் நின்றான் - கொடுத்துவிட்டுதன் வணக்கம் தோற்ற சற்று ஒதுங்கி நின்றான்
தப்பச்சொன்னோம் - பிழைக்கச்சொன்னோம்
தப்படி - குவட்டிக்குள்ளே
தப்பாமே - குறையாமே
தப்பின பிள்ளை - தப்பிப்போன பிள்ளை
தப்புதலின்றி - தப்பாமல், குற்றம் தட்டாமல்
தம்பம் - கம்பம், அசைவற்றது
தம்பதி - தம்முடைய பதி, ஊர்
தம்பரமல்லன - தங்கள் தங்களால் செய்து முடிக்கமுடியாத
தம்பிரான் - தலைவன்
தம்பி வளைக்காரி - தம்பியான கண்ணனை வளைத்தவள் - காப்பாற்றியவள் - துர்க்கை
தம்மடியார் - எம்பெருமான் ஒருவனுக்கே அடிமையாயிருப்பவர்கள்
தம்மடைந்தார் - எம்பெருமான் ஒருவனையே சரணமாகப் பற்றியவர்கள்
தம்மது - தம்முடையது. தன்னது - ஒருமை; தம்மது-பன்மை
தம்மனை - தம்முடைய மனை, பிறந்த பூமி மகாராவாற்று னகரவொற்றாய் தன்னுடைய கன்னை என்பர்.
தம்மன்னை - தன்னுடைய தாய்
தம்மன - தம்மவை, தம்முடையவை
தம்மான் - தனக்குத்தானே, ஈச்வரன், தம் அம்மான்-தம்மான்
தம்மில் கூடாதன - தமக்குள்ளே சேராதன
தம்மின் - தாருங்கோள்
தமப்பன் - தம்முடைய அப்பன் தமப்பன்- தகப்பன் என்று எழுதுவது பிழை
தமரும் தாங்களும் - தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்களும்
தமர் - அடியவர்; ஞாதிகள்
தமனகம் - தவனம், மருக்கொழுந்து

தமிக்க - தண்டிக்க தமம-அடக்கம, அடக்குதல்-தண்டித்தல்
தமியம் - தனிப்பட்ட நாம்
தமியர் - தனியாயிருப்பவர்
தமியாட்டி - தமி தனியாகி ஒப்பற்றள் என்று பொருள்
தமிலம் - மயிர்முடி
தமிழர், தமிழன் - வைணவ உரைகளில்-வடமொழி சாஸ்திரங்களைப் பயிலாமல் தமிழ்நூல் மட்டும் கற்றவர்களைச் சொல்லும்போது இப்படிச் சொல்லுவர்.
தமையன் - கண்ணன்
தயங்க - விளங்க, அசைய
தயக்ரீவன் - இராவணன்
தயங்கொளி - மிக்க ஒளி
தயலுற - தயவு உண்டாக
தயலுண்கை - பிணிப்புண்கை; ஆவது கட்டுப்படுகை
தயித்தியர் - அசுரர்
தர்ப்பணம் - வடமொழியிலுள்ள முதலெழுத்து 'த' என்று உச்சரித்துச்சொன்னால் பிதிருக்களுக்குக் கொடுக்கும்நீர்க்கடன்; மூன்றுவது 'த' என்று உச்சரித்துச் சொன்னால் கண்ணடி என்று பொருள்
தயிர்ப்பழஞ்சோறு - தயிரும் பழஞ்சோறும்
தயிர்வாவி - சோற்று மலைத்தொட்டியில் வகுத்துவிட்ட தயிர்வெள்ளம். தயிரோடை
தரக்கிற்றி - தரவல்லை
தரங்கம் - அலை; கடல், கலக்கம்
தரணிமங்கை - பூமிப்பிராட்டி
தரம் - தாரதம்யம்; அதிசயம்; வலிமை; ஒப்பு பரிசு, மேன்மை.
தரவு - அநுமதி, சீட்டு
தராளம் - முத்து, திரட்சி, நடுக்கம்
தருக்கி - நெருக்கி
தரிசு - கரம்பு, சாகுபடியாகாத நிலம்
தரிப்பறுதி - தரிக்கமுடியாமை
தருக்கு - வாதம், தர்க்கம், விளையாட்டு
தருக்கை - கர்வம்
தருதுயரம் தடாயேல் - நீயே தருகிற துக்கத்தை நீயே மாற்ருயாகில்
தருமன் - யமன்
தருமான மழைமுகில் - விரும்பமுடையார்க்கு விருப்பங்களைக் கொடுக்கும் கல்பதருபோலவும், விருப்பங்களை எதிர்பாராது கொடுக்கும் பெரிய மேகம் போல் உள்ள எம்பெருமான்.

(தொடரும்)

* * *

# கம்பனின் வைணவக் கோட்பாடு

திரு. L.P. சம்பத் - சென்னை.

வான்மீகி வடமொழியில் படைத்த உயர்ந்த காவியமான ஸ்ரீமத் இராமாயணத்தை,

"வையம் என்னை இகழவும்
மாசு எனக்கு
எய்தவும் இது இயம்புவது
யாது எனின்
பொய் இல் கேள்விப்
புலமையினோர் புகல்
தெய்வமாக்கவி மாட்சி தெரிவிக்கவே"
(தெய்வமாக்கவி-வான்மீகி)

என்று தீந்தமிழில் புனைந்தான் கம்பன். அயோத்தி என்னும் அம்மாண் நகருக்கு அரசனான தயரதன் அறுபதினாயிரம் ஆண்டுகள் இவ்வுலகை இம்மாண் கதைக்கு நாயகனான ஸ்ரீராமன் ஆண்டுவந்த விதம் ஓம்பி வந்தான். தனக்குப் புத்திரப் பேறு இல்லை என்ற குறை இருந்தும், வெகு முக்கியமாகக் கருதியது தனக்குப் பின் ஒரு வாரிசு இல்லாமல் இந்த வையகம் அவதிப்படும் என்பதை நினைந்து உள்ளம் வெம்பி குலகுருவான வசிஷ்டரின் முறையிட்டான்.

வசிஷ்டரும் அரசனின் குறையை உணர்ந்து கண்களை மூடிக்கொண்டு தன் மனத்திரையில் ஒருகாட்சி கண்டார்.

"அலைகடல் நடுவண் ஓர்
அனந்தன் மீமிசை
மலை என விழிதுயில் வளரும்
மாமுகில்
கொலை தொழில் அரக்கர்தம்
கொடுமை தீர்ப்பேன் என்று
உலையுறும் அமரருக்கு உரைத்த
வாய்மையே"

தேவர்கள் தாங்கள் அரக்கர்களிடம் படுகின்ற துன்பங்களை வ்யூகத்தில் படஞ்செய் நாகணை மேல் பள்ளிகொள்ளும் பரமனிடம் முறையிட அதற்கு அவனும் செவிமடுத்தி,

கருமுகில் தாமரைக்காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத்து ஏந்தி,
ஏந்து அலர்த்
திருவொடு பொலிய செம்பொன்
குன்றின் மேல்
வருவு போல் கலுழன் மேல்
வந்து தோன்றினான்

கார்மேனி வண்ணன் இரு கரங்களில் சங்கு சக்கரங்களை ஏந்தி மங்கை மஹாலக்ஷ்மியுடன் கருடன் மேல் அமர்ந்து காட்சி அளித்தான். நான்முகனும், கண்ணுதற் கடவுளும் மற்றைய விண்ணுளோர்களுடன் அடி மிசை விழுந்தனர். வைணவ சம்பிரதாயத்தில் அதி முக்கியமான இடம் பெறுவது சரணாகதி அல்லது பிரபத்தியாகும். ஸ்ரீமத் இராமாயணத்திற்கு சரணாகதி சாஸ்திரம் என்றும் பெயர். முதன் முதலில் பெருமாளிடம் தாங்கள் படும் துன்பங்களை எடுத்துரைத்து தங்கள் இயலாமையை வெளிப்படுத்தியது முதல் சரணாகதியாகும்.

முப்பரம் பொருளிற்குள் முதலை
மூலத்தை
இப்பரம் துடைத்தவர் எய்தும்
இன்பத்தை
அப்பனை அப்பினுள் அமிழ்தை,
தன்னையே
ஒப்பனை, ஒப்பனை உரைக்க
ஒண்ணுமோ

இந்த பாசுரத்தின் மூலம் கம்பன், மூன்று பரம் பொருளாக விளங்கும் நான்முகன், நாராயணன், கங்காதரன் இவர்களில் முதலானதும் மூலமானதாகவும், விளங்குபவன் ஸ்ரீமன் நாராயணனே என்பதை தெள்ளத்தெளியத் தெரியப்படுத்தித் தனக்கு வைணவத்திலுள்ள ஊற்றத்தை நிரூபிக்கிறான். கங்கைக் கரையிலுள்ள சிருங்கி பேரமென்ற நகரத்திற்கு அரசனாகிய குகன் என்பவன், கோசல நாட்டு தசரத சக்ரவர்த்தியின் குமாரனான ஸ்ரீராமபிரான் கங்கைக் கரையை அடைந்துள்ளான் என்பதை அறிந்து உபசாரமாக கைகளில் தேனும் மீனும் கொண்டு அடக்க ஒடுக்கத்தோடு ஸ்ரீராமபிரான் தங்கியுள்ள தவப்பள்ளியின் வாயிலில் நின்று "தலைவனே! நாய் போல் கடைப்பட்ட அடியவனாகிய நான் உனது கட்டளை ஏற்று ஏவல் புரிய வந்துள்ளேன்' என்று வேடுவர் கூவுவது போல் அழைத்தான். குரலைக் கேட்டு வெளியே வந்த இலக்குமணன் "நீ யார்? வந்த காரியம் யாது?' என வினவ, அதற்கு குகன் தான் கங்கைக்கரை வேடுவன் என்றும் ஓடங்களை ஓட்டி வயிற்றை வளர்ப்பவன் என்றும், தங்களை சேவிக்க வந்திருக்கிறேன் என்றும் கூற, உடனே இளையவன், "நீ இங்கே இருப்பாய்" என குகனை இருத்தி, உள்ளே சென்று ஸ்ரீராமனிடம் "கங்கை இருகரையுடையவ

னாம், நாவாய்கள் செலுத்தும் வேடுவனாம், அன்புபொழியும் பண்போடு தங்களைக் காணத் தன் பரிவாரத்துடன் வந்துள்ளான்" என்று தெரிவிக்க, இராம பிரானும் மனமுவந்து அவனை உள்ளே அழைத்து வரச்சொல்ல அவ்வாறே குகனிடம் இலக்குமணன் வருக என்றுரைக்க கமலக்கண்ணனைக் கண்ணுற்று கைகட்டி வாய் புதைத்து மேனி வளைத்து நின்றான் வேடுவத்தலைவன். தான் கொணர்ந்த அன்புக் காணிக்கைப் பொருளான தேனையும் மீனையும் எதிரே வைத்து "திருத்தி என் கொணர்ந்தேன்" என்பதைத் தெரிவித்தான். 'நறுக்குவது' என்பது சாதாரண வழக்கு. வைணவர்கள் காய்கறிகளை 'திருத்துவது' என்பார்கள். ஒரே சொல்லில் இரண்டு குணங்கள் அமைந்துள்ளன. காய்கறிகளை கத்தியால் நறுக்கி பிறகு அதில் புழுப்பூச்சிகள் ஏதாவது இருக்கிறதா என்று பரிசோதிப்பதை "திருத்தி" என்ற ஒரு சொல்லால் அமைகிறதல்லவா!

குகன் 'இறைவா!' என்று அழைத்தவுடன் வெளியில் வந்தவன் இளையபெருமாள். அவனை குகன் முதலில் தான் எதிர்பார்க்கும் ரவி குல திலகன் என எண்ணி, பிறகு ஸ்ரீராமனைக் கண்டவுடன் தான் வணங்கும் தெய்வம் அவனில்லை, இவன் தான் என்று மனதில் நிச்சயம் செய்துகொண்டான். இங்கே வைணவ சம்பிரதாயத்தைக் கம்பன் கையாண்டதை உணர்வோம். ஆசாரியனாக இலக்குவன் புருஷகாரமாயிருந்து உள்ளே எழுந்தருளியிருக்கும் திவ்ய தம்பதிகளை ஒரு நிஷ்காம்யரஹிதனான சேதனனுக்குக் காண்பிக்கிறான்.

வாலி ஸ்ரீராமனின் வாளியால் தாக்கப்பட்டு உயிர்ப்போகும் நிலைமையை அடைந்தும், அப்பிரானுடைய திறத்துக்கு ஒருபால் மதிப்பும் அன்பும் கொண்டுள்ளான் என்பதற்கு எடுத்துக்காட்டாக,

"..........ஓவியத்தெழுதவொண்ணா
உருவத்தாயுடைமையன்றே
ஆவியை சனகன் பெற்ற
அன்னத்தை அமிழ்தின்
வந்த தேவியைப் பிரிந்தபின்னை
திகைத்தனைபோலும் செய்கை"

சக்ரவர்த்தி திருமகனும் சீதாதேவியும் சித்திரக்கூடத்தில் ஏகாந்தமாய இயற்கை எழிலை ரசித்துக்கொண்டு இனிமையாய் இருக்கும் வேளையில் அவர்களுடைய ஆனந்தத்தைக் குலைத்த காகம் உருவங்கொண்ட ஜயந்தன் என்ற இந்திரனின் குமாரன் இழைத்த பிழை கொடியது. அதற்கு தண்டனையாய் அவன் ஒரு கண்ணை இழைக்கப்பெற்றான். ஆனால் கொல்லப்படவில்லை. சானகியின் கருணையினால் பிழைத்துப்போனான். வாலி அவ்வித ஒரு பெரிய குற்றம் ஏதும் செய்துவிடவில்லை. இருந்தாலும் உயிர் இழைக்க நேர்ந்தது ஏன்? சனக ராஜாவின் குமாரியும் மந்திர மலையைக் கொண்டு திருப்பாற் கடலை கடையும் பொழுது அமிழ்தோடு வந்தவளான சீதை அருகில் இல்லாததினால் ஸ்ரீராமன் தன் செய்கையில் திகைத்துப் போனான் என்ற சொற்களால் கம்பன் வைணவ மரபை ஒட்டிப் பேசுகிறான் என்பது நன்கு விளங்குகிறது. இந்த நிகழ்ச்சியை மனதில்கொண்டு கவியரசன் வாலி வாயிலாக "என்பால் எப்பிழைக்கண்டாயப்பா" என்று வினவுவதாக அமைத்தானே போதும்!

வாலியை இராமன் எளிதில் துளைத்ததற்குக் கம்பன் உலக வழக்கிலுள்ள உபமானத்தைக் கையாளுகிறான். முதிர்ந்த மிகுந்த ருசியையுடைய வாழைப்பழத்தை தைத்துச் செல்கின்ற ஊசிபோல் சென்றது.

"காரும் வார் சுவைக்கதலியின்
கனியினைக்கழியச்
சேரும் ஊசியில் சென்றது"

வாளியில் பொறிக்கப்பட்ட நாமாங்கிதமான 'இராம' என்ற எழுத்தைக் கண்டான் வாலி. அது எப்பேர்ப்பட்டது?

"மும்மை சாலுலக் கெல்லாம்
மூலமந்திரத்தை முற்றும்
தம்மையேதமரக்குநல்குந்தனி
பெரும்பதத்தைதானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை 'இராம'வென்னும்
செம்மைசேர் நாமந்தன்னைக்
கண்களில் தெரியக்கண்டான்"

தாரகமந்திரமான ராமநாமத்தின் மகிமையை உணர்த்துவதுமல்லாமல் அதை ஜபிக்கிறவர்கள் அந்த அவதாரத்தின் மூல புருஷனாக விளங்கும் ஸ்ரீமந்நாராயணனது பரம பதத்தை அடைவார்கள் என்று தனக்குள்ள மஹாவிஸ்வாசத்தை தெரியப்படுத்துகிறான் கவிச் சக்கரவர்த்தி. இந்த இடத்தில் வாலியைக் குறிப்பிடும் பொழுது "சிறியன சிந்தியாதான்" என்கிறார். மூல மந்திரத்தின் மகிமையால் நல்லுணர்வு எய்தி சிறிய எண்ணங்களைக் கொள்ளாதவனாய் ஸ்ரீராமனிடம், குற்றங்களைப் பொறுத்தருளுமாறு வாலி வேண்டுகிறான்.

வாலியின் உயிர் ஊசலாடும் தறுவாயில் அங்கதன் அவ்விடம் வருகிறான். அவ்வமயம் வாலியினுடைய நல்வார்த்தைகள் நெஞ்சைத் தொடுவனவாக உள்ளன. தான் முன்பு செய்த தவத்தின் பயனால் இத்தன்மையான மரணம் வந்து வாய்த்தது என்றும் வீரனாகிய ஸ்ரீராமனே வந்து தனக்கு வீடு தந்தருளினான் என்றும் கூறுகிறான். இளமைப் பருவத்தை கடந்த தன் மகனான அங்கதனைத் தான் சொல்கின்ற அறிவுரையை செவிமடுக்கச் சொல்கிறான். தான் "பரதத்துவம்" என்று தெரியாதபடி விட்டு நீர்மையை மேற்கொண்டு கால்கள் தரையில் தோய வந்துள்ளான்; பிறவி என்ற நோய்க்கு மருந்தாய் விளங்கும் ஸ்ரீராமனை வணங்கு என்கிறான்.

என்னுயிர்க்கு இறுதிசெய்தான்
என்பதை இம்மியும் எண்ணாது
உன்னுயிர்க்கு உறுதி செய்தி"
(கம்பர்)

தனக்கு பிறப்பு இறப்பு என்ற துன்பத்திலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது என்றும் தன் மகனுக்குக் கிடைக்கமுடியாத சந்தர்ப்பம் கிட்டியுள்ளது என்றும் அதைப் பயன்படுத்திக் கொள்ள அதாவது அவனுடைய ஆத்மா கடைத்தேற நிலையான நன்மையை செய்துகொள்ள ஸ்ரீராமன் திருவடியில் விழுந்து வணங்கு என்கிறான் வாலி.

இந்த இடத்தில் வாலியின் வாயிலாக கம்பன் வைணவ சம்பிரதாயத்தில் இன்றியமையாத 'பரந்நியாஸம்' அல்லது 'சரணாகதி' சாஸ்திரத்தின் தத்துவத்தை தெரியப்படுத்துவதாக நன்கு தெரிகிறது.

கலக்கம் தெளிந்த அரக்கனான விராதன் தத்துவ ஞானம் பெற்று ஸ்ரீராமனைப் புகழும் பாசுரங்கள் பதினான்கிலும் கம்பன் ஸ்ரீமந்நாராயணனே பரத்துவம் என்பதை நிர்த்தாரணம் பண்ணுகிறான். நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் சாரத்தை நாம் அவைகளில் காணலாம்.

நீயாதி பரம்பரமும் நின்னவே
உலகங்கள்
ஆயாத சமயமும் நின்னடியவே
அயலில்லை
நீயாரின் ஒளித்தியால் வெளி
நின்றால் தீங்குண்டோ



வீயாத பெருமாயை விளையாட்டும்
வேண்டுமோ

'முதன்மையாகிய மேலான கடவுளும் நீயே! எல்லா உலகங்களும் உனக்குக் கீழ்ப்பட்டவையே; ஆராய்தந்தறிதற்கு அரிய எல்லா மதங்களும் உன்னைக்காரணமாப்பற்றியவையே; வேறு இல்லை வஞ்சகர்கள் போல் ஒளிக்கின்ருய்; அங்ஙனம் ஒளியாது வெளிப்பட்டு நின்ருல் தீமை உண்டோ; அழியாத பெரிய மாயையாகிய விளையாட்டும் வேண்டுமோ?"

சுந்தரகாண்டத்தில் அனுமன் சீதையைக் கண்டதைக கம்பன் 'விரிமழைக்குலம் கிழித்து ஒளிரும் மின் என கருநிறத்து அரக்கியர்குழுவில் கண்டனன்' என்கிருர். மனம் நொந்து அனுமன் மூலம் இராமனுக்குச் செய்தியை தெரிவிக்கிற இடத்தில் சீதை வாயிலாக நாம் வைணவ தத்துவத்தைக் காணலாம்.

"வந்து எனைக் கரம் பற்றிய
வைகல் வாய்
இந்த இப்பிறவிக்கு இருமாதரை
சிந்தையாலும் தொடேன்
என்ற செவ்வரம் தந்த வார்த்தை
திருச்செவி சாற்றுவாய்"

இந்தப் பாசுரத்தில் வெளிப்படையாகத் தெரியும் அர்த்தம் ஒருபுறமிருக்க, கவியரசன் உள்ளத்தைச் சற்றே ஆராயலாம். திருமணத்தின் போது நாம் ஒவ்வொருவரும் சொல்லுகின்ற வார்த்தையை ஆசாரியபரமாக எடுத்துக் கொண்டு பார்த்தால் நன்கு விளங்கும். வைணவ கோட்பாடடில் முக்கியமாக விளங்குவது சரணுகதி. அது மோட்ச சாம்ராஜயத்திற்கு சுலபமான மார்க்கம் என்று அறுதியிட்டுக் கூறப்படுகிறது. அவரவர்கள் தங்களுடைய ஆசாரியனை அடைந்து தெண்டன் சமர்ப்பித்து சரணுகதி செய்துகொள்ளும் விருப்பங்களைப் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும். அதற்கு ஆசாரியன் இசைந்து பிராட்டியின் திருவடிகளைப் பற்றி அவளே புருஷகார பூதையாகக்கொண்டு பெருமாளிடம் ஒருசேதனன் தன் நல்வினை தீவினைகளையெல்லாம் சமர்ப்பித்து ஸ்ரீமந்நாராயணன்தான் பரத்துவம் என்ற அசைக்கமுடியாத மகாவிஸ்வாஸத்துடன் மறுபிறவி எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படாமலிருக்கவும், உயர்ந்த இடமான பரமபதத்தை அடைய விரும்புகிருன் என்று பிரார்த்தித்துக்கொள்கிருர். அந்த சேதனன் பிறகு பிரபன்னனாகி தேவதாந்திரங்களைத் தேடி அலையக்கூடாது என்பதாகும். இதையே கம்பன் உன்னி, 'இருமாதரை சிந்தையாலும் தொடேன்' என்ற சொற்றொடரை பிரயோகம் பண்ணி உள்ளான்.

சீதாப்பிராட்டியின் மற்ருெரு பேச்சில் திருவாகிய இலக்ஷ்மியிடம்தான் 'த்யை' என்னும் உதார குணம் உள்ளது என்றும், அவளைப் பிரிந்தால் பெருமாளிடம் அதைக்காண்பது இயலாது என்பதையும் கம்பன குறிப்பிடும் பாடலாவது,

ஆரம்தாழ் திருமார்பந்த
அமைந்தது ஓர்
தாரம்தான் அலனேனும் தயாஎனும்
ஈரம்தான் அகத்து இல்லை
என்னூனும் தன்
வீரம் காத்தலை வேண்டு
என்று வேண்டுவாய்

தான் பிரிந்ததினால் என்னவோ அவரிடம் தயா என்னும் ஈரம் போய்விட்டது என்று கூறுமிடத்து புருஷகாரத்துக்கு எவ்வளவு ஏற்றம் கொடுத்துள்ளது ஸ்ரீவைணவம் என்பதை கம்பன் கோடிட்டுக் காட்டியுள்ளான்.

இராவணன் சபையில் கொண்டு நிறுத்தப்பட்ட அனுமனின் விடையில் கம்பனின் அளவிடமுடியாத வைணவ பக்தி தெளும்புகிறது. அனுமன் தன்னை அறிமுகப்படுத்தும் இந்த இடத்தில் தன்னடக்கத்தோடு "அல்லியம் கமலமே அனைய செங்கண் ஓர் வில்லிதூதன் யான்" என்னை அனுப்பியவன் வேதத்தின் விழுப்பொருள்; அன்று ஒரு வாரணம் இடங்கர் வாயில் அகப்பட்டு தன் துதிக்கையைத் தூக்கி 'முதலே' என்று அலற அதைக்காக்க வந்த சரணுகத வத்ஸலன் ஆகும் என்கிருன்.

இன்னும் எவ்வளவோ இடங்களில் இந்த காப்பியத்தில் கம்பனின் வைணவ பிரதிபக்தி வெளிப்படையாகவும் சூத்திரமாகவும் அமைந்து உள்ளன.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## அறிவிப்பு

எதிர்பாராது தி.தி. தேவஸ்தான அச்சகத்தில் ஏற்பட்டுள்ள இயந்திரக்கோளாறு காரணமாக, 'ஸப்தகிரி' இதழ் காலதாமதமாக வெளியிடப்படுகிறது. இந்நிலை சிறிது நாட்களில் சரிப்பட்டுவிடுமென்பதால், வாசகர்கள் பொறுத்தருளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள்.

-ஆசிரியர்.

# சரித்திரமும் முரண்பாடும்

திரு. K.A. பார்த்தசாரதி - சென்னை.

திருவேங்கடமலையில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான், பெரிய திருமலை நம்பிகள் மற்றும் ராமாநுஜர் இவர்கள் சரித்திரம் ஒன்றுடு ஒன்று பிணைந்து இருக்கும் என்பதை ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரை திருமலை ஒழுகு மற்றும் "வேங்கடேச இதிகாசமாலா" (வடமொழிநூல்) என்ற நூல்கள்மூலம் ஆதாரமாக காணலாம். ஸ்ரீராமாநுஜர் தமது ஜீவித காலத்தில் மூன்றுமுறை திருமலைக்கு சென்றதாகவும் அதில் முதல் முறை, பெரிய திருமலைநம்பிகளை அடிபணிந்து ஸ்ரீராமாயண அர்த்தங்களை உபதேசம் பெற்ருர் என்பதும், இரண்டாவது முறை தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அவனுடைய சத்ருக்களால் அபாயம் ஏற்பட, அந்த சக்ரவர்த்திக்கு திருவேங்கடமுடையான் தனது அஸாதாரணமான திருவாழி திருசங்கு இவற்றைக் கொடுத்து உதவியதாகவும் அதுவே காரணமாக பகவானுடைய திருக்கைகளில் இந்த ஆயுதங்கள் இல்லாத நிலையில் சைவர்கள் திருவேங்கடமுடையானை தமது இஷ்ட தெய்வமான முருகன் என்று பிரசாரம் செய்ய தொடங்கினர். அப்பொழுது ராமாநுஜர் திருமலைக்குச் சென்று சைவர்களை வாதத்தில் வென்று மீண்டும் திருவேங்கடமுடையானுக்கு சங்கு சக்கரங்களை சமர்ப்பித்ததாகவும் சரித்திரம்.

மூன்ருவது முறையாக ராமநுசர் தமது சிஷ்யனான யாதவ ராயன் பிரார்த்தித்தபடி திருப்பதியில் ஸ்ரீகோவிந்த ராஜனுக்குக் கோயில் நிர்மாணித்தது; மலையில் கோயில் நிர்வாகத்தில் பல சீர்த்திருத்தங்களை செய்து ஜீயர் மடம் ஒன்றை ஸ்தாபித்து அதில் தானே முதல் ஜீயராக இருந்து மேற்பார்வை இட்டுவந்தார் என்பது. இதுவரையிலான சரித்திரத்தை நூல் ஆதாரம் கொண்டு "'திருவேங்கடமுடையானும் ராமாநுசரும்'' என்ற தலைப்பில் விஸ்தாரமாக "ஸப்தகிரி - ஏப்ரல் 94" இதழில் காணலாம்.

பெரிய திருமலை நம்பிகள் பாபவிநாசம் என்ற இட்த்திலிருந்து திருவேங்கடமுடையானுக்கு தினமும் தீர்த்த கைங்கர்யம் செய்து வந்தார் என்பதும், ஒருசமய விசேஷத்தில் அந்த கைங்கர்யத்திற்குத் தடை ஏற்பட வேடன் உருவில் வந்த பகவான் ஆகாச கங்கையை தோற்றுவித்தான் என்ற கதாபாகமும் நூல் ஆதாரங்களை காட்டி "திருவேங்கடமுடையானும் ஆளவந்தாரும்" என்ற தலைப்பில் "ஸப்தகிரி" என்ற இதழில் காணலாம். இதுவரையானது பெரிய திருமலை நம்பிகள் சரித்திரம்.

மைசூர் ராஜ்யத்தில் சிறுபுத்தூர் என்ற ஊரில் அவதரித்தவர் அநந்தாழ்வான். அவர் ராமாநுசரை ஆசார்யனாக அடைந்தவர். ஒருசமயம் ராமாநுசர் காலக்ஷேபம் செய்துவருகிருர். "ஒழிவில் காலம் எல்லாம்" என்ற மூன்றும்பத்து மூன்றும் திருவாய்மொழி காலக்ஷேபம் நடைபெறும் சந்தர்ப்பத்தில் தம்முன் எழுந்தருளியிருக்கும் சிஷ்யர்களை நோக்கி 'ஆழ்வார் பாலித்த குறைதீர திருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு நித்ய கைங்கர்யம் செய்வதில் விருப்பம் உடையவர் யாரேனும் உண்டோ?' என்று கேட்க - ஆநந்தாழ்வான் எழுந்து "அடியேனுக்கு நியமிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான் என்றும் அதுமுதல் அவர் அநந்தாண் பிள்ளை என்று அபிமானத்தால் அழைக்கப்பட்டார் என்பது சரித்திரம். திருவேங்கடமுடையானுக்கு நந்தவன கைங்கர்யமே இவர் செய்து வந்தார். பின் ஒரு சமயம் திருமலையில் ராமாநுசர் ஒரு மடத்தை ஸ்தாபிக்க அதில் இவர் பிரதான சீடராகவும் இருந்தவர். அன்று முதல் இன்றுவரை திருமலையில் ராமாநுசர் சந்நிதியில் கைங்கர்யம் செய்து வருபவர் இந்த பரம்பரையில் தோன்றியவர்களே.

பெரிய திருமலைநம்பிகள் மற்றும் திருமலை அநந்தாழ்வான் இருவரும் வேறுபட்டவர். நம்பிகள் செய்துவந்தது தீர்த்த கைங்கர்யம். அநந்தாழ்வான் செய்து வந்தது நந்தவன கைங்கர்யம். அவரவர்கள் தாம் எடுத்துக்கொண்ட கைங்கர்யத்தால் வேறுபட்டவர்கள் என்பது

புராதன நூல்கள் மூலம் நமக்கு கிடைத்துவருபவை. இதுவரை சரித்திரம் சொல்லப்பட்டது.

இதற்குமேல் தலைப்பிற்கு சேர, முரண்பாடுகள் தெரிவிக்கப்படும்.

ஆகாச கங்கை என்ற தலைப்பில் ஸப்தகிரி - ஜூன் 95 காணப்படும் விஷயங்களில் சில சரித்திரத்திற்கு முரண்பட்டவை. "ஆழ்வார்கள் வழி வந்த திருமலைநம்பி" என்பதை திருத்தி அமைக்கவேண்டும். ஆசார்யர்கள் காலம் ஆழ்வார்களுக்கு மிகவும் பிற்பட்டது. அதில் நாதமுனிகள் தொடங்கி பிறகு ஆளவந்தார், பெரியநம்பிகள், பெரிய திருமலைநம்பி ராமாநுசர் என்ற முறையில் சேர்ந்தவரே பெரிய திருமலை நம்பிகள். இவர் ராமாநுசருக்கு வயதில் மூத்தவர், சமகாலத்தவர். ஒருவகையில் ராமாநுசருக்கு அமைந்த ஐந்து ஆசார்யர்களில் இவரும் ஒருவர்.

திருவாய்மொழிக்கு அமைந்த பூர்வாசார்ய வியாக்யானங்கள் ஐந்து. இவை எதுவும் ஆளவந்தார் காலத்தில் தோன்றவில்லை. ஆகவே "ஆளவந்தார் ஒருசமயம் திருவாய்மொழியின் முப்பத்தாராயிரப்படி வியாக்யானத்தை அடியார்களுக்கு அருளிச்செய்து கொண்டு இருந்தார்" என்பது முரணானது.

ராமாநுசர் உபன்னியாச கோஷ்டியில் "ஒழிவில்காலம் எல்லாம்" - பதிகத்தில் காணப்படும் கைங்கர்ய பிரார்த்தனை அநந்தாழ்வான் விஷயமாக அமைந்தது. அதனை ஆளவந்தார் பெரிய திருமலை நம்பி விஷயமாக தெரிவிப்பது மற்றும் ஓர் மருள்.

"சுமந்து மாமல் நீர் சுடர்............." என்ற பாசுரத்தில் வியாக்யானங்களில் காணப்படும் சரித்திரம் வேறாக அமைந்திருக்கிறது. அதாவது - "ஜகந்நாதத்தில் எம்பெருமான் சண்பகப்பூவை உகந்து சாத்திக்கொள்வான் என்பது பிரஸித்தம். சில ராஜகுமாரர்களுக்கு சண்பகப் பூவை சம்பாதித்து எம்பெருமானுக்கு சாத்தவேண்டும் என்ற அவா. கடைத்தெருவில் தேடிச் சென்றார்கள். அங்கு ஒரு கடையில் ஒரே புஷ்பம் காணப்படுகிறது. ராஜகுமார்கள் தமது செல்வச் செருக்கினால் அந்த பூவை தாமே பெற்றுபோய் சமர்ப்பிக்கவேண்டும் என்ற ஆசை மிகுதியால் அதன் விலையை மேல் மேலும் ஏற்றிக் கேட்டு கடைசியாக ஒருராஜகுமார் அதை அதிக விலை கொடுத்து வாங்கி அதனை பகவானுக்கு சமர்ப்பித்தான். பகவான் அந்த ராஜகுமாரன் கனவில் தோன்றி "நீ இட்ட பூ மிகவும் கனத்து சுமக்க ஒண்ணுததாக இருந்தது" என்று அருளிச்செய்தார் என்பதாம். முப்பத்தாராயிரப்படி வியாக்யானத்தை கண்கொண்டு பாராமலே கதைகளை மாற்றி தெரிவிப்பது என்ற மருளும் எடுத்துக்காட்டப்பட்டது.

கடைசியாக "அறியாக்காலத்துள்ளே" என்ற (2-2-3) பாசுரத்தில் காணப்படும் சரித்திரம் வேறுபட்டது. ஆழ்வார் தன்னையே முன்நிலைப்படுத்தி அமைந்த பாசுரம். இதை பெரிய திருமலை நம்பி விஷயமாக வெளியிட்டதும் ஒருமருள்.

ஆன்மீக பிரசாரத்தில் ஆர்வம் கொண்டவர்கள் சரித்திரங்களில் முரண்பாடுகள் ஏற்படாத வரையில் ஆதார நூல்களை சரி பார்த்து பிறகு எழுதவேண்டும் என்ற பிரார்த்தனையுடன் பூர்த்திசெய்கிறேன்.

பெரிய திருமலைநம்பி திருவடிகளே சரணம். ❖

# செய்திச் சுருக்கம்



## நினைவுநாள் விழா

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து திருவேங்கடவன் மீது சுமார் 15,000 பக்திப்பாடல்கள் புனைந்த பக்திக் கவிஞரான ஸ்ரீதாள்ளபாக்க அனனமாசார்யாவின் நினைவுநாள் மற்றும் பிறந்தநாள் விழாவினை தி.தி. தேவஸ்தானம் ஒவ்வொரு ஆண்டும் கொண்டாடி வருகின்றது. இவ்வகையில் அன்னாரின் 493ஆவது நினைவுநாள் விழாவானது திருமலை, திருப்பதி மற்றும் அன்னமய்யா பிறந்த இடமான தாள்ளபாக்கம் (கடப்பா மாவட்டம், ஆந்திரமாநிலம்) ஆகிய இடங்களில் வெகுச்சிறப்பாக 16-3-96 முதல் ஏழுநாட்களுக்கு நடைபெற்றது. திருமலையில் மூன்று நாட்களுக்கு நாராயணகிரி தோட்டத்தில் இவ்விழா இனிதாக நடைபெற்றது. இதுபோது திருமலைக்கோயிலிலிருந்து உத்ஸவர் மாடவீதிகளில் திருவீதி வலமாக வந்து நாராயணகிரி தோட்டத்திற்கு எழுந்தருளினார். இத்திருவீதி வலத்தின் போது திருப்பதி ஸ்ரீபத்மாவதி மகளிர்ப் பல்கலைக் கழகத்தின் திரு. பிரபஞ்சம் சீதாராம் அவர்கள் 'அன்னமய்யா' வேடம் புனைந்துவர, பஜனைக் கோஷ்டிகள், அஹோபில மடத்தின் ஸ்ரீமந்நாராயண யதீந்த்ர மகா தேசிகர் ஜீயர், தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் மற்றும் பல இசை அறிஞர்கள் புடைசூழ வந்த இத் திருவீதி வலம் கண்ணையும், கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. நாராயணகிரி தோட்டத்தில், உத்ஸவர் ஊஞ்சலில் எழுந்தருள, அவர் முன் அன்னமய்யாவின் இரண்டரை அடி பஞ்சலோக திருருவுருவம் முன்னிலையில், விழா இனிதே துவங்கியது. திருவாளர்கள் நூகல சின்ன சத்யநாராயணா, திருச்சூர் வி. ராமச்சந்திரன், எம். பாலசுப்ரமண்ய சர்மா, புதுக்கோட்டை ஆர். கிருஷ்ணமூர்த்தி, கல்லூரி முரளி கிருஷ்ண மற்றும் திருமதி. மணி கிருஷ்ணசாமி, திருமதி. சாருமதி ராமச்சந்திரன் ஆகியோர் அன்னமய்யா பாடல்களைக் கொண்ட இன்னிசைக் கச்சேரியினை வழங்கிட, அதனை பெரிய ஜீயர், சின்ன ஜீயர், காஞ்சிமடத்தின் இரு சுவாமிகள் ஆகியோருடன் ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொதுமக்கள் யாவரும் கண்டு, கேட்டு மகிழ்ந்தனர். திருப்பதியில் ஸ்ரீஅன்னமாசார்யா கலா மந்திரத்தில் காலையில் திருவாளர்கள் எஸ். லக்ஷ்மணய்யா,





ஜி. பாலகிருஷ்ணபிரஸாத், ஜே. பாலசுப்பிரமண்யம், கே. ஸர்வோத்தம ராவ், எம். கொண்டமாசார்யா, ஜி. சலபதி, ஜி.வி. சுப்ரமண்யம் ஆகியோரின் அன்னமய்யா பாடல்கள் பற்றிய உரைக்கோவைகள் நடைபெற்றன. மாலை வேளைகளில் இன்னிசைக்கச்சேரி மற்றும் ஹரிகதை போன்ற நிகழ்ச்சிகளுக்கு ஏராளமான உள்ளூர் மக்கள் வருகை புரிந்து சிறப்பித்தனர். தாள்ளபாக்கத்தில் இரண்டு நாட்களுக்கு இந் நினைவுநாள் விழா சிறப்பாக நடைபெற்றது. முதல்நாளன்று 'கிருஷ்ண ராயபாரம்' எனும் இசை நாடகம் நடைபெற்றது. அடுத்தாளன்று திருமதி. பாஸ்கர பிரமராம்பா அவர்களின் இசைக்கச்சேரியும் திரு. வை. வேங்கடேஸ்வரலு அவர்களின் 'ஸ்ரீநிவாசா கல்யாணம்' எனும் ஹரிகதை நிகழ்ச்சியும் நடைபெற்றன.

* * *

## பிரம்மோத்ஸவம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 18-3-96 முதல் 26-3-96 வரை வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இதுபோது திருப்பதி நகர முக்கிய விதிகள் யாவும் விழாக்கோலம் பூணும் வகையில் அலங்கரிக்கப்பட்டன. 20-3-96 அன்று தெலுங்கு வருடப்பிறப்பான 'யுகாதி' எனும் விழா கொண்டாடப்பட்டதால், அன்று நடைபெற்ற முத்துப் பந்தல் வாகனத்திற்கும், 22-3-96 அன்று நடைபெற்ற கருட சேவைக்கும், மற்றும் 23-3-96 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்ற திருத்தேரின் நிகழ்ச்சியின் போதும் ஆயிரக்கணக்கில் யாத்திரிகர்களும், உள்ளூர் மக்களும் கூடியிருந்து நிகழ்ச்சிகளை கண்டு களித்தனர். பிரம்மோத்ஸவத்தைத் தொடர்ந்து 28-3-96 முதல் 30-3-96 வரை 'ஸ்ரீராமநவமி' விழா கோயில் அரங்கில் இனிது கொண்டாடப்பட்டது. 29-3-96 அன்று நடைபெற்ற "சீதாராம திருக்கல்யாணம்" நிகழ்ச்சியில் ரூ. 250 செலுத்தி சுமார் 230 கிருஹஸ்தர்கள் பங்கேற்றனர். இந்நிகழ்ச்சிகள் யாவும் கோயில் வளாகம் மற்றும் வெளியில் கூடிய பொதுமக்கள் காணும் வகையில் தொலைக்காட்சி மூலம் ஒளிப்பரப்பு செய்யப்பட்டன.

* * *

## நேர்மைக்குப் பாராட்டு

சென்ற மாதம் பதினோராம் தேதி திருமலைக்கோயில் வளாகத்தில் ரூ. 3 இலட்சம் பெறுமான கங்கணம் எனும் 'கைவளை' அணி ஒன்று தி.தி. தேவஸ்தான பாதுகாப்பு துறையைச் சார்ந்த திரு. ராஜரத்னம் எனபவரால் கண்டெடுக்கப்பட்டது. பின்னர அந்நகையினை அதன உரிமையாளரான பம்பாயைச் சார்ந்த திரு. ஆனந்த் ஜெயின் அவர்களிடம் நடைமுறை விதிமுறைகளுக்குப் பிறகு ஒப்படைக்கப்பட்டது. ஊழியரின் நேர்மையைப் பாராட்டும் வகையில் ரூ. 200/- பரிசும் பாராட்டுப் பத்திரமும் வழுங்கப்பட்டன.

* * *

## ஓய்வு பெற்றார்

தி.தி. தேவஸ்தான அச்சகத்தில் 'பைண்டிங்' பிரிவில் திரு. கோயில்பிள்ளை அவர்கள் சுமார் 20 ஆண்டுகளாக 'முதல் நிலை' ஊழியராக பணிபுரிந்து 29-2-96 அன்று பணியிலிருந்து ஓய்வுபெற்றதைத் தொடர்ந்து, அன்று மாலை அச்சகக்கட்டிட வளாகத்தில் அச்சக ஊழியர்களால் அன்னாரக்கு 'பிரிவு வாழ்த்துரை' வழுங்கப்பட்டது. இதுபோது ஊழியர்கள் சார்பில் 'ஸப்தகிரி' ஆசிரியர் திரு. என்.எஸ். ராமமூர்த்தி அவர்களால் திரு. கோயில்பிள்ளை அவர்கள் பொன்னாடைப் போர்த்தப்பட்டு கௌரவிக்கப்பட, அச்சக மேலாளர் திரு. மோகன்ராவ் அவர்களால் பரிசு வழுங்கப்பட்டு, பாராட்டப்பட்டார்.

* * *

# ஆசிரியர்க்கு......

ஐயா,

வணக்கம். T.T.D. வெளியிடும் ஸப்தகிரி இதழை விரும்பிப் படிக்கும் வாசகன நான். தஙகளின் டிசம்பர்'95 இதழில் பக்கம் 21ல் "எம்பெருமானார் புரட்சி" என்ற தலைப்பில் திரு. எஸ். சேதுராமன, சென்னை என்பவரால் ஒரு விளக்கம தரப்பட்டுள்ளது. அடியேன் ஒரு வைகநஸன் என்ற முறையில் அவ்விளக்கத்தினால் ஏறபடடுள்ள மிகுநத வேதனையையும வருத்தத்தையும் உங்களுக்குத்தெரியப் படுத்துகிறேன. வைகாநஸம் எனபது அநத திருவேங்கடமுடையானான நாராயணனே தோற்றுவித்தது. தொன்றுதொட்டு பலலாண்டுகாலமாக அவன ஆராதனத்திற்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்ட ஆகமம். ஏழுமலையானின திவ்ய கடாக்ஷத்தில் வெளிவரும் ஸப்தகிரியில அவனை ஆராதிக்கும் வைகாநஸ ஆகமத்தைப பற்றி எநத ஒரு செய்தியும் விளக்கமும் ஒரு பொருட்டாக வெளிவருவதில்லை. இருப்பினும் டிசம்பர் 95 இதழில் எம்பெருமானார் வைகாநஸ ஆகமத்திலிருந்து பல கோயில்களை பாஞ்சராத்திர ஆகமத்திற்கு மாற்றி புரட்சி செய்தார் என்று வெளியிட்டிருப்பது வேதனையையும், அதற்குக் கட்டுரையாளர் தெரிவித்துள்ள விளக்கம் வியப்பையும் அளிக்கின்றன. வைகாநஸம் முற்றிலும் வேத நெறியை தழுவிய ஒரு பிரிவினருக்கு மட்டும் உரியது என்ற அவர் பாஞ்சராத்திர ஆகமம் கட்டுப்பாடு இல்லாத, அனைத்துப்பிரிவு மக்களுககும் பொதுவான, "கடவுள் முன் எல்லோரும் ஓர் குலம்" என்ற கொள்கையோடு இருப்பதாகக் கோடிட்டுக்காட்டியுள்ளதுதான் மிகுந்த ஆச்சரியமாக உள்ளது. என் சிற்றறிவிற்குத தெரிந்த வகையில் பாஞ்சராத்திர ஆகமப்படி திருவாராதநம் நடைபெறும் ஆலயங்களிலும் அனைத்து பிரிவினரும் ஆராதநம் பண்ணக்கூடியத் தகுதியைப் பெறுவதிலலை. அத்துடன் அவர்கள் வைஷ்ணவர்களாகவே இருந்தாலும் எந்த கட்டுப்பாடும் இல்லாமல அவர்கள் ஆராதநம செய்யும் தகுதியை பெற்றுவிடுவதாக எனககுத் தெரியவில்லை. அந்த ஆகமும் கட்டுப்பாடுடனும் பலவிதிமுறைகளுடனும்தான் நடக்கிறது. மேலும எம்பெருமானாரே மனம் உகந்து அவர் அவதார ஸ்தலத்திலேயே தன்னை ஆராதிக்கும் பாக்கியத்தை வைகாநஸனுக்குத்தான தந்திருப்பது இவ்வாகமத்தின் பெருஞ்சிறப்பு. மேலும் அவருக்குப்பின் அவதரித்த ஸ்வாமி நிகமாகாந்த மஹாதேசிகனும் தன்னை ஆராதிக்கும் பாக்கியத்தை வைகாநஸனுக்குத்தான் ஏற்படுத்தியுள்ளார். நீங்கள் வெளியிட்டுள்ள செய்தி சரிதானா என்பதை பாஞ்சராத்திர ஆகமத்தில் சிரேஷ்டர்களான வித்வான்களிடம் கேட்டு அடியேனுக்குத் தெளியப்படுத்தும்படி பிரார்த்திக்கிறேன்.

இறுதியாக, எவ்வித வேற்றுமையில்லாமல் அனைவருக்கும் ஸ்ரீ ஸ்ரீநிவாஸனின் பேரருள் கிடைத்திடும் வகையில் வேறு எந்த ஒரு இறைவனையும் மதத்தையும் தரம் தாழ்த்தாமல் வைணவத்தையும் ஸ்ரீமந் நாராயணனின் திவ்ய ப்ரபாவத்தையும் வெளியிட்டுவரும் மிக மகத்தான பணியை தொய்வில்லாமல் செய்து கொண்டுவரும் ஸப்தகிரி ஆசிரியர் குழுவிற்கு வைகாநஸ ஆகமத்தைப் பற்றி தரம் தாழ்த்தி அல்லது முரண்டபட்ட கருத்துக்கள் எதையும் வெளியிடவேண்டாம் என்றும், கட்டுரையாளர்கள் தெரிவிக்கும் கருத்துக்களை ஆராய்ந்து பின்னர் வெளியிடும்படியும் சிரம் தாழ்த்தி மிகவும் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள வாசகன்,

A.K. ரகுநாதன் - சென்னை.



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

